Regd. No. 2569

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

حفاظة الإسلام

# HIFAZATH - UL - ISLAM

உயர்தர செந்தமிழ் மாத சஞ்சிகை

மலர் 2. | ஹிஜ்ரி 1349 துல்கஃதாமீ 1931 ஏப்ரல்மீ | இதழ் 4

உள்ளடக்கம் — பக்கம்



சென்னை, ஹிபாஜத்துல் இஸ்லாம் சங்கத்தாரின் வெளியீடு.

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

---

### சந்தா விபரம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இந்தியா, பர்மா, ஸிலோன் முதலிய உள் நாடுகளுக்கு | ... | ரூபா | 3 | 0 | 0 |
| பினங்கு, சிங்கப்பூர், மலாய் முதலிய வெளிநாடுகளுக்கு | ... | ,, | 4 | 0 | 0 |
| தனிப் பிரதி | ... | ,, | 0 | 4 | 0 |

ஒரு வருஷத்திற்கு குறைந்து பத்திரிகை அனுப்பப்படமாட்டாது.

---

### நிபந்தனைகள்

1. சந்தாதாரர்களாகச் சேருகிறவர் முன்பணம் செலுத்தியாவது, வி. பி. யிலாவது பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளவேண்டும்.

2. சந்தாதாரர்கள் கடிதம் எழுதும்பொழுதும், மணியார்டர் அனுப்பும்பொழுதும் தங்கள் சந்தா நம்பரை அவசியம் குறிப்பிடவேண்டும். பதிலறிய விரும்புவோர் ஸ்டாம்பு அனுப்பவேண்டும்.

3. ஒரு வருஷத்திற்கு இடையில் சந்தாதாரராகச் சேருவோர் இஷ்டப்பட்டால் முந்திய மாதங்களின் சஞ்சிகைகளையும் கிரயம் கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

4. விஷயதானஞ் செய்ய விருப்புங் கனவான்கள் எளிய நடையில் ஒரேபக்கத்தில் மிகத் தெளிவாக எழுதி அனுப்பவேண்டும்.

5. மததூஷணையான விஷயங்களும், வீண் தர்க்கங்களை யுண்டு பண்ணும் வியாசங்களும், ஆளைக்குறித்துத் தாக்கி எழுதும் வியாசங்களும், பத்திரிகையின் நோக்கத்திற்கு மாறுபாடான வியாசங்களும் பிரசுரிக்கப்படமாட்டா.

6. எந்த வியாசத்தையும் நிறுத்திக்கொள்ளவும், திருத்திக்கொள்ளவும், சுருக்கிக்கொள்ளவும் ஆசிரியருக்கு உரிமையுண்டு.

---

மானேஜர்,

**"ஹிபாஜத்துல் இஸ்லாம்" ஆபீஸ்,**

48, அங்கப்ப நாய்க்கன் தெரு,

**G. T.** மதராஸ்.






حفاظة الاسلام مدراس

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம் [குர்ஆன்]

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்றஹீம் ஸாஹிப் (பாக்கவீ)

| | | |
|---|---|---|
| மலர் 2 | ஹிஜ்ரி 1349 துல்கஃதா மீ<br>1931௵ ஏப்ரல் மீ | இதழ் 4 |


## ஸூரத்துத் தகாதுர்

நிகரற்ற அருளாளனும் அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் (நான் இதனை ஆரம்பிக்கின்றேன்.)

(1) மிகையை நாடுதல் உங்களை பராக்கா[க்கி] விட்டது.

(2) நீங்கள் புதைகுழி (கப்ரு) களைச் சந்திக்[கும்] வரை.

(3) காரியம் அவ்வாறன்று; கடிதில் தெரி[ந்து] கோள்வீர்கள்.

(4) பின்னும் அவ்வாறன்று; கடிதில் நீங்[கள்] தெரிந்து கோள்வீர்கள்.

(5) அவ்வாறன்று; நீங்கள் அறியும் முறை[யில்] அறிவீர்களாயின் (தெரிந்து கோள்வீர்கள்)

(6) நிச்சயமாக நீங்கள் நரகத்தைக் காண்[பீர்]கள்;

(7) மீண்டும் நீங்கள் நரகத்தைக் கண்[கூடா]கக் கண்டு கோள்வீர்கள்.

(8) பிறகு நீங்கள் (உலகத்தில் உங்களுக்[கு அளி]க்கப்பெற்ற) பாக்கியங் (நிஅமத்) களைப் [பற்றி] விசாரிக்கப் படுவீர்கள்.

[அதாவது, நீங்கள் பொருட் செல்வம், [மனை], மக்கள், கூட்டம், குடும்பம், ஜனக்கட்டு முதலியன மிகையா யிருத்தலைக் கொண்டு ஒருவர்க்கொருவர் பெருமை பாராட்டிப் வேசிக் கொள்வதி லீடுபட்டிருத்தலான், ஆண்டவனை அறியவேண்டிய முறை, மானிடர்களுக்குப் புரியவேண்டிய சேவை, தனக்கு மறுமையில் பிரயோசன மளிக்கத்தக்கக் கருமங்கள் போன்ற மானிடர்கள்மீது கடமையாக்கப் பெற்றவைகளை நிறைவேற்றுவதி லீடுபடாவண்ணம் உங்களைப்பராக்காக்கி வைத்து விட்டது. நீங்கள், அவ்வாறு செய்தது தவறு என்பதை உங்கள் மரணத்திற்குப் பின் நிக்ஷயமாகத் தெரிந்து கொள்வீர்கள். அதற்குப் பின் ஆண்டவனால் உங்களுக் களிக்கப்பெற்று இம்மையிற் சுகித்த நிஅமத்களைப் பற்றிக் கேட்கப் படுவீர்கள்; என்பதே.]

இத்திரு அத்தியாயம் 'மக்கீ' யாம். இதில், மானிடன் தனம், மனை, மக்கள், ஜனக்கட்டு, முதலியவைகளின் மிகையைத் தேடுவதில் ஈடுபட்டுழல்வதால், தீமைகளுண்டாம் எனவும், அன்னவனது மனதில் மறுமையைப் பற்றிய பயம் எத்துணை ஏற்படவேண்டுமோ அதைப்

பார்க்கினும் பன்மடங்கு மிகை நாடிச் செல்
வதன் மீது பயம் ஏற்பட வேண்டுமெனவும்,
மிகுதத்தைத் தேடுவதால் மானிடனுக்கும்
அவன் செல்லவேண்டிய நாட்டத்திற்குமிடை
யில் திரை ஏற்பட்டு இவன் மனே ஓர்மை
படைக்க முடியாதவனுய் முடிவாக வேதனை
யிற் சென்று ஆழ்த்திவிடப் படுகின்றுனுத
லின், ஆண்டவனை மறந்து மிகுதத்தைத்தேடு
பவன் பிற்காலத்தில் காணும் காட்சிகள்
இவையெனவும் விளக்கமாய்க் கூறப்பட்
டிருப்பதனுல் இத் திருஅத்தியாயம் 'ஸூரத்
துத் தகாதுர்' (மிகை நாடல்) என்னும்
பெயரோடு வழங்கப் படுகின்றது.

இவ் அத்தியாயம் அருளப்பட்டதின் கா
ரணம் :— மக்கமா நகரின்கண் வதியும்
குறைஷிகள் இருபிரிவினராக இருந்தனர்.
ஒன்ருவது, 'பனூ அப்தெ முனுப்' சந்ததியி
னர், நம் உலகரக்ஷகர் காத்தமுன் னபிய்யீன்
(ஸல்.) அவர்களும் இவ் வம்மிசத்திற் பிறந்
தவர்களே. இரண்டாவது, 'பனூஸஹூம்'
சந்ததியினர்; புகழ்பெற்ற ஆஸிப்னு வாயி
லெ ஸஹ்மீ' இவர்களது தலைவராகும். ஒரு
நாள் இவ்விரு பிரிவினரும் தத்தம் கூட்டத்
தின் அந்தஸ்தைப் பற்றியும், ஐஸ்வரியம், நற்
கருமங்கள் புரிதல், விவாகங்களில் ஆடம்
பரஞ்செய்தல், அபரிமிதமாய் விருந்தளித்தல்
முதலியவைப் பற்றியும், தங்கள் பெயர் ஓங்கி
வருவதைப் பாராட்டிப் பேசிவருங்காலை ஜன
எண்ணிக்கை யாரிடத்தில் அதிகமிருக்கின்ற
தென்பதைப் பார்க்கவேண்டுமென்ற பிரச்னை
அவர்களுக்கிடையே கிளர்ந்து எண்ணிக்கையி
லீடு பட்டபோது 'பனூஸஹூம்' கூட்டத்
தினரைப் பார்க்கினும் 'பனூ அப்தெமுனுப்'
கூட்டத்தினர் மிகைபட இருப்பதைப் பார்
த்து எங்களிலுண்டாய. ஆண்களில் பலர்
போர்க் களத்தில் மாண்டிருக் கின்றனர்;
அவர்களையும் ஒன்ருகக் கூட்டிக் கணக்கிட
வேண்டுமென்று பனூஸஹூம்கள் கூறினர்.
அவ்வாறே கணக்கிட்டதில் பனூஸஹூம்
களே அதிகமாயிருந்தனர். இதன் தொடர்
பாய் இறந்து போனவர்களின் எண்ணிக்கை
யைத் திட்டப் படுத்தும்போது புதைகுழி
(கப்றஸ்தான்) களுக்குச் சென்று கப்றுகளை
யும் எண்ணிப் பார்க்கும்படி நேரிட்டது.
இன்னேர் இத்தகைய மடமைத்தனத்தி லீடு
பட்டு மறுமையை மறந்திருத்தலை வெளியாக்

கிக் காண்பிப்பதற்கே, இத் திருஅத்தியாயம்
இறங்கிற்று.

உலகத்தில் மானிடன் தன் அந்திய காலத்
தில் தனப் பெருக்கையும், சந்ததிப் பெ
ருக்கு, பணியாட்கள், சுற்றத்தார் உறவினர்,
இவர்களது மிதமிஞ்சிய வளர்ப்பையுமே
நாடுகின்றுன். ஏனெனின், பொருளாலும்,
ஜனக்கட்டாலும் சதாகாலமும் இவனது
பெயர் இப் பூவுலகின்கண் பிரக்யாதிபெற்று
விளங்குமென்று இவன் கருதுகின்றுன். இவ்
வாறு இன்னேன் தன் சிந்தனையை இதிலே
யே செலுத்திக் கொண்டிருக்கின்றனன்
ஆதலின், இவன் பேரில் கடமையாக்கப் பெற்
றுள்ளவைகளாய ஆண்டவனை வணக்கம் புரி
தல், பிறருக்கும் தனக்கும் ஆற்றவேண்டிய
கடமைகளை நன் குணர்ந்து செய்தல், முத
லியவைகளை விட்டும் இவன் மறதிக்குள்ளா
கின்றுன். அதன் காரணமாக வாணுளை எக்
கருமத்தில் போக்க ஆண்டவன் அளித்துள்
ளானே, அதில் செலவிடாமல், ஒருவர்
கொருவர் மிகுதத்தைத் தேடி பெருமை பா
ராட்டிப் பேசிக் கொள்வதில் போக்கி வி
கின்றமையால், அன்னவன் மனிதத் தன்மை
யின் பதவியினின்றும் கீழே தாழ்த்தப்பெற்
மிருகங்களினும் தாழ்ந்தோனுகின்றுன். அ
னேன் அம்மறதி கேட்டைவிட்டும் வெளியா
மனிதத்தன்மையை அடைந்து நேர்மையான
வழியிற் செல்வதை வழக்கத்திற் கொண்
வருவனேல், அவனினும் பாக்கிய சாலிகள்
இருப்பரோ? அவ்வாறின்றி, அதே மற
கேட்டில் தன் வாணுட்களைக் கழித்து ம
ணித்து விடுவானுயின் பெரும் நஷ்டத்தை
சம்பாதித்துக் கொண்டவனே போலாகி
றுன். கீழ்க் குறிப்பிடப்பட் டிருப்பவனை இ
னுக் குபமானமாகக் கூறுவது பொருந்து
அஃதாவது :—

ஒருவனுக்கு சில பொருட்களைக் கொடுத்
வியாபாரஞ்செய்து இலாபம் சம்பாதித்
வருமாறு கடைத் தெருக்கனுப்பப் பட்டான்
அவன் ஆங்கு சென்று மிதமிஞ்சிய ம
வருந்தி மதிமயங்கி தன்னிடம் கொடுக்கப்ப
டிருந்த முதலையும் இழந்து அயர்ந்து வி
டான். மாலைப்பொழுதில் அவனைத் தூக்
வீடு கொண்டு வரும்படி நேரிட்டது. இ
நிலைமையில் இலாபஞ் சம்பாதிப்பதிற்கு
பதிலாக அவனுக் களிக்கப்பட்டிருந்த அ
முதலே அவனுல் கைவிடப் பெற்றது.



இதன் எட்டாவது வசனத்தில், "நாம்,
உலகில் அளிக்கப்பட்டுள்ள பாக்கியங்கள்)
ளைப் பற்றிக் கேட்கப்படும்" என்பதாக
றப்பட்டிருக்கிறது. மானிடனுக் களிக்கப்
பெற்ற பாக்கியங்கள் விஷயமாக மூன்று
வகையான கேள்விகள் பிறக்கும். ஒன்ரு
து செல்வங்களை ஆண்டவனுக்குப் பிரிய
ன விதத்தில் சம்பாத்தியஞ் செய்தானு?
அல்லது மார்க்க விரோதமான கருமங்கள்
ரிவது கொண்டு சம்பாத்தியஞ் செய்தானு?
ன்றும்; இரண்டாவது அதை ஆண்டவனுக்
குப் பொருத்தமான வழியிற் செலவு செய்
தானு? அன்றி, பொருத்தமற்ற விஷயங்க
ளிற் செலவு செய்தானு? என்றும், மூன்ருவது
ஆண்டவனுல் அவனுக்களிக்கப் பெற்ற
செல்வங்களுக்கு நன்றி பாராட்டும் விதமாக
ாது செய்தான்? என்றும் கேட்கப்படு
ான். நாம் ஈண்டு சற்றுக் கூர்ந்து பார்ப்
போமாயின், அபரிமிதமான செல்வம் அளிக்
கப்பட்டவர்களுட்பட ஏழைகள் வரை அனை
வரும் தங்களுக்களிக்கப்பட்டுள்ள செல்வங்
களைப் பொருத்தமட்டில் கேட்கப்படுவர்
களென்பது நன்கு புலனுகும். உதாஹாரண
மாக :— குளிர்ந்த நீர், சூடான ஆகாரம்,
சௌகரியமான இடம், தூக்கத்தின் இன்பம்,
சுகம், தூய்மையான இஸ்லாம், குர்ஆன்ஷரீப்,
நமக்கு 'நபீ'யாக அனுப்பப்பட்ட நாயகம்
(ஸல்.) அவர்கள், பூர்வீக மார்க்கங்களைப்
போலல்லாது அனுஷ்டானத்திற் கேற்ற
மார்க்கம் இன்னம் இவை போன்ற பாக்கியங்
களை பரதேசி முதல் சீமான்வரை யாவரும்
அனுபவித்திருப்பதுடன் அதற்கு நன்றி
செலுத்தாமலேயே யிருக்கின்றனர்.

சில அறிஞர்கள் ஆண்டவனுல் அளிக்கப்
பெற்ற பாக்கியங்களின் கருத்தாவது சுகத்
தோடிருத்தல், வலிமையோடிருத்தல், அச்சந்
தீர்ந்திருத்தல் இம்மூன்றுதாமெனக் கூறுகின்
றனர். ஒவ்வொருவனும் தன் வாழ்க்கையில்.
இம் மூன்றையும் அனுபவிக்காமலும் சுகம்
பெருமலுமிருக்க முடியாது. ஒரு எழை நம்
நபிகள் திலகம் (ஸல்.) அவர்களது சமூகஞ்
சென்று "யாறசூலல்லாஹ்! உலகத்தில் எனக்
களிக்கப் பெற்ற எப்பாக்கியத்தைப்பற்றி
ஆண்டவனுல் யான் கேட்கப் படுவேன்" என
வினவியமைக்கு "உமக்களிக்கப் பெற்ற ஆகா
ரம், குளிர்ந்த நீர், நிழல் இவைகளைத் தொட்
டும் கேட்கப்படுவா"யென நாயகம் (ஸல்.)
அவர்கள் விடை பகர்ந்தமை சிறப்பாய ஹதீ
தில் கூறப்பட்டிருப்பதைக் காண்க! ஈதன்றி
நபிகள் திலகம் (ஸல்.) அமீருல் மூஃமினீன்
களாய ஹஜ்ரத் அபூ பக்கர் ஸித்தீக் (ரலி.)
ஹஸ்ரத் உமர்பாரூக் (ரலி.) முதலானேர்
ஹஜ்ரத் அபுல் லதீம் (ரலி.) அவர்களது இல்
லத்திற்கு விருந்தாளியாகச் சென்று, பேரித்
தம் பழத்துடன், உரொட்டி, புசித்து குளிர்
ந்த நீர் அருந்தினுர்கள்; பின்னர் நாயகம்
(ஸல்.) அவர்கள் "இதுவும் இறைவனுல் நமக்
களிக்கப் பெற்ற பாக்கியமேயாகும்; இதைப்
பற்றியும் நாம் கேட்கப்படுவோம்" என திரு
வாய் மலர்ந்தருளியதாக ஹதீது ஷரீபிற்
கூறப்பட்டிருக்கிறது ஆதலால் மானிடர்
யாவரும் தங்களுக்களிக்கப் பெற்றுள்ள பாக்
கியங்களைப் பற்றி நிச்சயம் கேட்கப் படுவார்
களென்பது தெற்றென விளங்கக் கிடக்கின்
றது. வல்லாஹூ அஃலம்.

---

## நன்றிபாராட்டுகின்ரேம்.

நம் 'ஹிபாஜத்துல் இஸ்லாம்' சங்கத்தின் கௌரவ காரியதரிசியாகிய ஆலீ ஜனுப்
மவ்லவீ S. A. முஹம்மத் அலீ சாஹிப் அவர்கள் தங்களது வியர்பார நிமித்தம் பினங்கு,
சிங்கப்பூர், மலாய்நாடு முதலிய பிறதேசங்களுக்குச் சுற்றுப்பிரயாணஞ் சென்ற வமயம், நம்
இஸ்லாமிய சமுகத்திற்கும் தேசத்திற்கும் இராப்பகல் இணையிலா தாற்றிவரும் செந்தமிழ்
மாசிகையாம் "ஹிபாஜத்துல் இஸ்லாமின்" அரும் பெருந்தொண்டைப்பாராட்டி நம் சஞ்
சிகையை மென்மேலும் அபிவிருத்திக்குக் கொணருவான் வேண்டி பினங்கில் ஜனுப்களாய
S. E. S. முஹம்மத் இஸ்மாயீல் ராவுத்தர், ஹாஜி முஹம்மத் நூருத்தீன் ராவுத்தர், கிள்ளா
னில் ஜனுப்களாய K.A. பக்கீர் முஹம்மத் ஸாஹிப், ஹாஜி கே. ஒ. முஹம்மத் இபுராஹீம் ரா
வுத்தர், சிங்கப்பூரில் மெஸ்ஸர்ஸ் A: M. அப்துல்லாஸாஹிப் Co, ஜனுப் முஹம்மத் மொய்
தீன் ராவுத்தர் முதலிய கனவான்கள் தங்களது விடா முயற்சியால் போதிய சந்தாதாரர்
களைச் சேர்த்து உதவி புரிந்து திருப்தியளித்தமைக்கு அன்னேர் கட்கெங்களது நன்றியறித
லாய மனமுவந்த பாராட்டுதல் உரித்தாகுக.

# நாயக வாக்கியம்.

ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு ஆற்றவேண்டிய கடமைகள் ஆறு உள. ஒன்றுவது
அவரைச் சந்தித்தவுடன், ஸலாம் சோல்லல். இரண்டாவது அவர் சாப்பாட்டிற் கழைப்பா
ராயின் அதை ஒப்புக்கோள்ளல். மூன்றுவது, அவருக்கு தும்மல் ஏற்பட்டு 'அல்ஹம்துலில்
ஹாஹ்' (எல்லாப் புகழும் ஆண்டவனுக்கே) எனக் கூறுவாராயின், 'யர்ஹமுகல்லாஹ்'
(ஆண்டவன் உமக்கு கிருபை பாலிப்பானுக) என மோழிந்து அவரது சுகத்திற்கு வேண்
தல் புரிதல். நான்காவது அன்னோர் வியாதியஸ்தராய் விடுவாராயின் அவரிடஞ் சென்று
க்ஷேமத்தை விசாரித்தல். ஐந்தாவது, அவர் மாண்டுவிடுவாராயின் அவரது ஜனஸாவுடன்
சேல்லல். ஆறுவது தனக்கு விருப்பமான வஸ்துவையே அன்னோருக்கும் நாடல், "ஹதீஸ்."

இத் திருவாக்கின் கண் இஸ்லாமிய சகோ
தரத்துவம் அனுஷ்டிக்கப்படும் விதத்தை நம்
பெருமானார் (ஸல்.) அவர்கள் எவ்வாறு கூறி
யிருக்கின்றார்களென்பதை உய்த்துணர்ந்து
பார்ப்போமாயின், இஸ்லாம் மதம் உலகின்
கண் சமாதானம் அளிப்பதற்காகவே அல்
லாஹ் (ஜல்) வால் அருளப்பட்ட மதமென்ப
தும், இதற்கு நிகராய வேறு எம்மதமும் இரு
க்கமுடியாதென்பதும் நன்கு புலனாகும். ஒரு
முஸ்லிமின்மீது ஒருபக்கல் ஆண்டவனை
வணக்கம் புரிதல் கடமையாக்கப் பெற்றிருப்
பின், மற்றொரு பக்கல் தன் முஸ்லிம் சகோ
தரரின், கடமைகளை நிறைவேற்றல் அவசிய
மெனவும் ஏற்பட்டுள்ளது. மேலே வரையப்
பெற்ற 'ஹதீதுஷரீபி'ல் கூறப் பெற்றுள்ள
ஆறு கடமைகளும் சகோதரத்துவம், சகோ
தர வாஞ்சை இவைகளைப் பொதிந்துள்ளன
வாகவும், மானிடர்கள் ஒற்றுமையாய் வாழ்வ
தன்பொருட்டு தாங்கள் இடைவிடாது அனு
ஷ்டித்து வருவதற்கு இன்றியமையாதன
வாகவும் மிளிர்கின்றன. முஸ்லிம்களது முன்
னேற்றமும் அவர்கள் அடையப்போகும் பல்
வகை ஜெயங்களின் நுணுக்கங்கள் அனைத்
தும் இக் கடமைகளை நிறைவேற்றுவதிலேயே
மறைக்கப்பட்டுள்ளன.

ஒருவர்க்கொருவர் சந்திப்பு ஏற்படுங்கால்
'ஸலாம்' சொல்லும் வழக்கம் மானிடர்
களிலே பல்வகையாக அநுஷ்டிக்கப்பட்டு
வருகிறது. ஆனால் நம் இஸ்லாமிய மதமா
னது எவ்வழியை நமக்கு கற்பித்திருக்கின்
றதோ நிச்சயமாக அது உலகத்தார் அனுஷ்
டித்து வரும் சகல பழக்க வழக்கங்களைப்

பார்க்கினும் உயர்வானதாகக் காணப்ப
கின்றது. உதாஹரணமாக:—ஹிந்து நண்ப
கள் ஒருவரையொருவர் சந்திப்பார்களாயின்
கைகூப்பித் தலை சாய்க்கின்றனர். இவை
தனக்குச் சமமான ஒருவனை அளவுக்குமீற
உயர்த்தி அகச் செருக்கை யுண்டாக்குவத
குள்ள வித்தை விதைத்து விடுவதற்கிலக்க
கின்றது. இஃதன்றி கிறிஸ்துவ நேயர்களிட
காணப்படும் விதமோவெனின், பிறருக்கு ம
யாதை செய்ய வேண்டியதற்குப் பதிலா
தன்னை கௌரவமாகக்காண்பித்து பெரு
பாராட்டியவராய் தன் கையைத் த
வரை உயர்த்தி எடுத்துக் கொள்ளல் த
னையே கௌரவித்துக் கொள்வதுபே
லிருக்கின்றது. ஆனால் நம் முஸ்லி
சகோதரர்கள் அனுஷ்டித்து வரும் முறை
யோ வெனின், இவ் இரண்டுக்கு மிடையி
ஆண்டவனிடம் பிரார்த்தனை புரிந்து இ
வரின் க்ஷேம இலாபத்தைச் சந்தோஷமா
முறையில் நாடுவதாகவே இருக்கின்றது
இதே காரணத்தால் தான் 'ஸலாமை' 'த
னால் அளிக்கப்பெற்ற ஓர் சன்மான' மென
தாக தன் திருமறையின் கண் கூறியுள்ளா

இஸ்லாமிய மார்க்கமானது உண்மை
ஸலாம் சொல்வது கொண்டு அளவற்ற பிர
யையும், சமத்துவத்தையும், சகோதர வா
சையையும் அபரிமிதமாக அளித்து வரு
பிரத்தியக்ஷம். சந்திப்பவன் தாழ்ந்தோ
யிருப்பினும் ராஜாதி ராஜனாயிருப்பினு
முதன்முதலாக அவனுக்குச் செலுத்த வே
டிய சன்மானமும், மரியாதையும் இதுவா
தான் இருக்கின்றது. முஸ்லிம் என்





முறையில் உயர்பதவியுள்ள ஒருவன் எத்
தகைய மரியாதையை அடைய உரிமையாள
னாக யிருக்கின்றானோ அத்தன்மைப்போல்
தாழ்ந்த பதவியிலுள்ள முஸ்லிமும் அம்மரி
யாதையை அடைய உரிமையாளனாகின்றான்.
ஒவ்வொரு மானிடரும் சமாதானத்தை மக்
களிடையே பரத்துவான் வேண்டியே இவ்
அகிலத்தின்கண் உண்டாக்கப்பட்டிருக்கின்
றனர். அன்னோர் ஜீவித்திருப்பதின் தலை
மையான நோக்கம் அச்சமின்மை, சமாதா
னம் இவைகளை உலகினர்க்கு அறிவித்துக்
கொடுப்பதற்கேயாம்.

முஸ்லிம்கள் ஒருவர்க்கொருவர் சந்திக்
கும்போது துவக்கமாக எம் மொழியை தம்
நாவில் உச்சரிக்கின்றனரோ அதே 'ஸலாம்'
என்னும் வார்த்தையானது ஆண்டவனது
திருநாமங்களில் ஒன்றாகவும் திகழ்கின்றது.
அதன்றி முஸ்லிம்களுக்கு மறுமையில் தருவ
தாக வாக்களிக்கப் பெற்ற வீட்டிற்கும்
"தாருஸ் ஸலாம்" என்று பெயரிடப் பெற்
றுள்ளது. முஸ்லிம்களது மார்க்கமும் 'இஸ்
லாம்' என்னும் திருநாமத்தைக் கொண்டே
வழங்கப்பெற்று வருகின்றது. முடிவாக அச்
சந்தீர்த்து வைப்பது, ஒற்றுமை, சமாதானம்
இவைகளை ஏற்படுத்தலென்பது நம் முஸ்லிம்
களது வழக்கத்திலேயே ஏற்பட்டதாய் அன்
னாரது கௌரவத்திற்கும் காரணமாயுளது.
ஏனெனின், நமது மார்க்கத்தில் அனுஷ்டிக்
கப்பெறும் ஒவ்வொரு வார்த்தைக்கும்
முன்னேற்றம், சமாதானம் என்ற கருத்துக்கள்
பொருந்தியிருப்பதைக் காணலாம்.

இரண்டாங்கடமை நம் முஸ்லிம் சகோதர
ன் விருந்தழைப்பைஒப்புக்கொள்ளவேண்டு
மென கூறப்பட்டிருக்கிறது. இதுவும் பரஸ்
பரம் சகோதர வாஞ்சையை அபரிமிதமாய்
உண்டாக்கிக்கொள்ளக் கைகண்ட சாதன
மாகும். வேதத்தைக் கொடுக்கப்பட்டவர்
களில் மேதாவியாயிருந்த ஹஸ்ரத் அப்துல்
லாஹிப்னு ஸலாம்(ரலி.) அவர்கள் இஸ்லாம்
மதத்தை தழுவியதற்கு காரணம் நாயகம்
(ஸல்.) அவர்களால் ஆற்றப்பெற்ற மனதைக்
கவரத்தக்க பிரசங்கத்தைக் கேட்டதாகும்.
அப்பிரசங்கத்தினிடையே "மானிடர்கள் ஒரு
வர்க்கொருவர் சாப்பாடு போட்டுக்கொள்
ளுங்களெனக்" கூறினார்கள். தங்களுக்குள்
ஒற்றுமையை உண்டுபண்ணிக் கொள்வதற்கு

ஆகாரம் வழக்கிக்கொள்வதைப் பார்க்கினும்
மேலான யாதொரு வஸ்துவும் கிடையாது.
இத்தகைய பிரீதி, நட்பு, முதலிய இன்னோ
ரன்ன அரும் பெருஞ் சிறந்த குணங்களை
யுண்டாக்கி வைக்கவேண்டு மென்பது தான்
இஸ்லாம் மதத்தின் முக்கிய நோக்கமாகும்.

மூன்றாங்கடமை, ஒரு முஸ்லிமுக்கு 'தும்
மல்' உண்டாகி 'அல் ஹம்து லில்லாஹ்'
என்று சொல்வாராயின் அதைக் கேட்
டவர் 'யர்ஹமுகல்லாஹ்' என்னும் வாக்
கியத்தை உச்சரித்து அவருக்காகப்
பிரார்த்தனைப் புரியவேண்டும். ஏனெனின்
தும்மல் ஏற்படுவது கொண்டு மூளைக்கு
ஒரு வகையான சுகம் ஏற்படுகின்றது. மற்
றவர் 'யர்ஹமுகல்லாஹ்' என்று சொல்வ
தன் கருத்தாவது "ஆண்டவன் உமக்கு
சுகத்தைக் கொடுத்துத் தன் கிருபையால்
எவ்வித வியாதியும் கஷ்டமும் வந்தணுகா
மல் காப்பாற்றிக் கொள்வானாக!" என்ப
தாகும்.

நான்காவது கடமை ஒரு முஸ்லிம் பிணி
வாய்ப்பட்டிருக்குங்கால் அவரை யணுகி
ஆறுதல் கூறுதல் தன் சகோதரரிடம் தனக்
குள்ள உள்ளன்பு ஒற்றுமை யுணர்ச்சி இவை
களை வெளிப்படுத்தலாகும்.

ஐந்தாவது. அவரது ஜனஸாவுடன் செல்
லல் இஸ்லாமிய சகோதர வாஞ்சையை
இறுதிவரை பரிபூரணமாக்கி வைத்து அன்
புற்றிருப்பதற்கு அடையாளமாகும்.

ஆறுவது தனக்குப் பிரியமான வஸ்துவை
யே தன் முஸ்லிம் சகோதரனுக்கும் பிரிய
மானதாகக் கருதவேண்டும். எந்த முஸ்லிம்
தன் சகோதரனுக்குச் செய்யவேண்டிய கட
மைகளை எக்காலும் தன் இருதயத்திலிருத்தி
அவைகளை நிறைவேற்ற ஆயத்தமாகின்றா
னோ, அன்னவனுக்கு அளவற்ற ஜெயங்கிட்
டும். ஆனால் இப் பதினான்காம் நூற்றாண்
டில் இஸ்லாம் மிகவும் க்ஷீண திசையை
யடைந்து விட்டது. ஆண்டவனுக்கு செ
லுத்த வேண்டிய கடமைகளை சரிவர நிறை
வேற்ற மக்கள் முன்வருகின்றார்களல்லர். இத்
தகைய நிலைமையில் தங்களது சகோதரவாஞ்
சையை எவ்வாறு நிறைவேற்றப் போகின்ற
னர் என்பதை நாம் நன்கு கவனித்தல் அவ
சியமாகும்.

———



# பெண் கல்வி

கல்வி என்பது ஆண், பெண் இருதரத்தார்
க்கும் கண்ணே போன்றுளது என்பது ஒரு
தலை. மனத்தை நல்வழியில் பயிற்றுவித்து
விவேகத்தைப் பெருக்கி, அறிவை விசாலிக்கச்
செய்தற்குக் கல்வியைப் பார்க்கினும்
உயர்ந்த தொன்றில்லை என்பது கூறாமலே
பொருந்தும். மக்கள் என்னும் படைப்பு
ஆண்களை மட்டுமே கொண்ட தன்றாதலின்,
பெண்களும் ஆண்களுடன் ஒப்ப நோக்கப்
பெறுதல் கல்வியைப் பற்றிய அளவில் இயல்
புடைத்தாகும். ஒரு குடும்பத்தில் தந்தையும்
தாயும் ஒத்த அறிவினர்களாயிருக்க ஆங்கு
பிறக்கும் குழந்தைகளும் பொதுவாக அறி
வுடையனவாயிருத்தல் வேண்டும். தாயே
யின்றித் தந்தை மட்டும் பயின்றவராயும்,
இன்றேல் தந்தையே யின்றித் தாய்மட்டும்
பயின்றவராயும் உள்ள ஒரு குடும்பத்தில்
முற்கூறிய குடும்பத்தின் குழந்தைகள்பால்
காணப்படும் இயற்கை அறிவின் திறம் சிறிது
குன்றியே இருக்கும்' என்பதில் ஐயப்
பாடின்று. இஃதே போல் தாயும் தந்தையும்
பயிற்சியிலார்களாயின் அக்குடும்பத்தின்கண்
உதிக்கும் குழந்தைகள் முன்னர்கூறிய இரு
வகைக் குடும்பங்களின் குழந்தைகளிலும்அறி
வில் குன்றியனவாகவே தோற்றுதல் இயல்
பாம். எனவே கல்வி என்பது மக்களது அறி
வுப் பெருக்கிற்கு தலைமையான ஆதாரம்
என்றேற்படுகின்றது. இத்துணைச் சிறப்பும்
இன்றியமையாத்தன்மையும்பொருந்தியகல்வி
என்னும் அரிய செல்வத்தை நம் சமுகம்
ஆண்கட்கு வழங்க முயற்சித்து வருதலே
போன்று பெண்கட்கும் அளிக்கப் பெரிதும்
உழைக்க வேண்டும் என்பது எம் கருத்து.
கல்வியின் அளவும் தன்மையும் துறையும்
ஆண்கட்குள்ளவை போன்று பெண்கட்கு
இருத்தல் அவசிய மின்று, மேனாட்டார்கள்
கைக் கொண்டொழுகும் வண்ணம், நம் சமு
கத்துப் பெண்டிற் பெரும் உத்தியோகத்
தலங்கட்குச் சென்று 'டைப்' அடிப்பது,
கணக்கு வேலை பார்ப்பது, புகைவண்டி ஓட்
தல் முதல் பல தொழில்களிலும் ஈடுபட
போவதில்லை; அவ்வாறு போதற்கும் நம் தூய
மார்க்கம் இடந்தருவனவென்று, ஆதலின்
ஆண்கள் கற்கும் கல்வி ஒருவாறாகவும், பெண்
கள் கற்கும் கல்வி பெண்களது தன்மைக்கும்
அவர்களது பிற்கால வாழ்க்கைக்கும்
பொருத்தமுள்ள மற்றொருவாறாகவும் இரு
தல் அவசியம் என்று ஏற்படுகின்றது. மார்
கக் கல்வி, சுகாதாரம், போன்ற சில பகு
கள் இருபாலர்க்கும் பொதுவாக இருத்
லோடு, பெண்கட்கென்று குடும்ப நிர்வாக
குழந்தைகளைப் பேணுதல், குடும்பக் கணக்
வைத்தல் போன்ற ஆண்கட்கு அவசியம
லாத சில பகுதிகள் தனிப்பட்ட முறையி
அளிக்கப்பட வேண்டும்; எனவே ஆண்க
கென்று அமைக்கப்பெற்றுள்ளபள்ளிக்கூட
களில் நமது பெண்கள் பயிற்சி பெறுத
கூடாததாகவும், தீயமுறையாகவுந் த
ஆகின்றன. ஆங்கிலேயர்கள்போன்ற மேனா
டினர் கலப்புப்பள்ளிக்கூடங்கள் வைத்
ருப்பதைக் கண்டுநம்மனோரிற் சிலரும் வ
ழுந்த நரிகளாகக்கருதித் தாமும் அத்தகை
கலப்புப்பள்ளிக்கூடங்களை விரும்புவதாக
அவைகளால்நம்சமுகம் முன்னேற்றம்பெ
என்பதாகவும்பிதற்றுகின்றனர். மேனாட்டார்
கலப்புப் பள்ளிக்கூடங்களேயின்றி, கலப்புக்
குளிக்கும் துறைகளும், இக்குளிக்கும் துறை
ல் இரு பாலாரும் ஆடையின்றிக்'க்ரீடை'
புரிதற்குற்றவைகளும் அமைத்துவைத்துக்
கொண்டு மிதமிஞ்சிய நாகரிகப் புதை
மணலில் இடையளவும் இறங்கி விட்ட
னர். நாமும் இவர்களைக் கண்டு ஏமாற்றம்
எய்தி அப்• புதைமணலிற் சிக்குறாது இருத்
தற்கு நம்மார்க்கம், நம் நாகரிகம், நம்
பழங்கவழக்கங்கள் இவற்றை எட்டுணையும்
நெகிடாது இவற்றின் அளவிற்றான் பெண்
கட்குக் கல்வி போதிக்கத் தலைப்படல் வேண்
டும். நெசவுத் தொழிலாளனுக்கு எங்ஙனம்
தச்சுத்தொழில் பயிற்றுதல் அறிவுடைய
தன்றோ, அங்ஙனமே ஆண்கட்குரிய கல்விப்
பகுதிகள் எல்லாவற்றையும் பெண்கட்குப்
பயிற்ற முற்படுதல் மடமையாகும் என்று
மீண்டும் வலியுறுத்திக் கூறுதலோடு, பெண்
கள் தம் பெண்மைக்கும், மென்மைக்கும்,
உடற்கூறுக்கும், குடும்ப வாழ்க்கைக்கும்
ஏற்ற போதனைகளைப் பயிற்றற்குரிய சாதனங்
களையே நாம் அளித்தல் வேண்டும். ஆண்
களோடு இளமையில் ஒன்றாகச் சேர்ந்துக்
கால்பந்தாட்டம் முதலிய விளையாட்டுகளை
ஆடிய சிறுமிகள் பிற்காலத்தில் பெண்டிராய்
மனைவியராய், தாய்களாய் குடும்பத்தலைமை
பெற்று விளங்குவார்கள் என்று எதிர்பார்த்
தல் எம்மட்டிற் பொருத்தமுளதாகும் என்
பதை அன்பர்கள் ஊன்றிச் சிந்திப்பார்
களாக. ஆதலின் கல்வி என்பது பெண்கட்கு
அவசியம் என்றும், அக் கல்விதான் ஆண்
கட்கு அளிக்கப்படும் முறையில்-தன்மையில்-
அளவில் பெண்கட்கு அளிக்கப்படலாகாது
என்றும், பெண்கட்குப் பிரத்தியேகமானப்
பயிற்றுமுறைகளை அளித்தலே நமது கடமை
யாம் என்றும் கூறினோம்.

நிற்க, பெண்களின் வாணாட்கள் ஆண்
களின் வாணாட்களைப் போன்று ஒரே வித
மாகக் கழிவனவாகா. ஆண்கள் எல்லா
முயற்சிகளிலும் ஈடுபட்டுழைத்தற் குரிய
உடற்கட்டுடன் படைக்கப்பெற்றிருக்கின்ற
னர். பெண்கள் இத்தகைய ஆண்களையும்
இத்தகைய ஆண்களைப் பெறவல்ல பெண்
களையும் தம் உதரத்தில் வைத்துக்காத்து
உலகத்திற்கு உதவிபுரியும் தாய்களாகப்
படைக்கப்பெற் றிருக்கின்றனர். பெண்கள்
பிள்ளைகளைப் பெறுதலும், வீடடங்கி யிருத்த
லும் பெண்களை உயர்வுடையவர்களாய்ச்
செய்கின்றனவே யன்றி, சிலக் குறுக்கு
யோசனைக் காரர்கள் பிதற்றுமாறு அடிமை
களாய்ச் செய்வனவாகா எனவே, நம் சமு
கத்தினர், நஞ் சிறுமிகள் குடும்ப வாழ்க்கை
யில் பிற்காலத்தில் இருந்ததற்கு நம்வேதாக
மங்கள் எத்தகைய விதிகளை விதித்
திருக்கின்றனவோ, அத்தகைய விதிகட்கு
இயைந்தவாறே பயிற்றப் பெறுதல் வேண்
டும். கோஷா முறை கூடாது என்று கூக்
குரலிடும் நவ நாகரீகக் கூட்டத்தார் இவர்
கள் தம் வழிகாட்டிகளாய்க் கொண்டுள்ள
மேனாட்டார்களின் தற்கால இழிந்த நிலை
யைக் கண்டாயினும் இனி கோஷா முறை
கூடாதென வற்புறுத்தமாட்டார்கள் என்று
நம்புகின்றோம். கோஷா முறைபோன்ற கட்
டுக்காவல் இல்லா நிலைமையினால், மேனாட்
டில் ஒருமனைவி தன் கொழுநனோடு சேர்ந்
தாற்போன்று மூன்று ஆண்டுகளேனும்
விவாக ரத்தின்றிக் குடும்பம் நடாத்துதல்
அரிதாயிருக்கின்றது என்று அமெரிக்க
ஆங்கிலேயப் பத்திரிகைகள் ஓலமிடுகின்றன.
குடும்ப வாழ்க்கை என்பதே மேனாட்டில்
நூற்றில் தொண்ணூற்றியைந்து பகுதி நாச
மாய் விட்டதென்று திண்ணமாய்க் கூறலாம்.
வேலையில்லாத் திண்டாட்டத்தில் கோடிக்
கணக்கும், குடும்பமில்லாக் கொழுநர்களில்
கோடிக்கணக்கும் உள்ள மேனாட்டு நாகரிகத்

தை நாம் எட்டுணையும் அநுஷ்டித்தற்குத்
தக்க ஆதாரமில்லாமல் இருப்பதோடு, நம்
மேன்மை பொருந்திய, அறிவிற்கியைந்த திரு
மறையும், பெருமானார் (ஸல்.) அவர்களது
திருவாக்கும் ஒப்புக்கொள்ளவுமில்லை. பெண்
கட்கு நாம் கல்வி பயிற்றுவதில் பெரிதும்
நுண்ணிய புத்தியை உடையவர்களாய், பர்
தா விலக்கு முதலிய படுகுழிகளில் வீழாது
பாதுகாத்துக் கொள்ள வேண்டியவர்களாய்
இருக்கின்றோம். சீர்திருத்தக்காரர்கள் ஓல
மிடுவது போன்று பர்தா முறைக்கு இணங்
காத அளவில் நாம் நமது சிறுமிகட்குக்
கல்வி போதிப்பதினும் கல்வியே போதிக்கா
மல் இருப்பது நன்று ; எல்லாம் வல்ல இறை
வன் இவர்களைக் கைவிடான் என்ற போழ்
தினும், நாம் பிற சமுகங்களோடு வாழ்க்கைப்
போராட்டம் நடத்தி நாளுக்கு நாள் எல்
லாத் துறைகளிலும் மேம்பட்ட சமுகத்தினர்
களாய் விளங்கவேண்டியது நம் கடமையாய்
இருத்தலால், நமது சிறுமிகட்குக் கல்வி
இன்றி யமையாததாகும். அக் கல்வியின்
பகுதிகள் இவை என்று நாம் வரையிறுத்து,
அக்கல்விப் பகுதிகளை நம் மார்க்கத்திற்கு
இயைபுகொண்டு புகட்டல் நமது கடமையா
கின்றமையால், நஞ் சமுகத்து அன்பர்கள்,
அறிஞர்கள், பணக்காரர்கள் எல்லோரும்
இதனைப் பற்றி ஊன்றிச் சிந்தித்து ஏற்றத
புரிய முன் எழுவார்களாக.

---

# தொழுகையை நிறைவேற்றுதிருத்தல்.

இவ்வுலகின் சுகானுபவங்களில் மூழ்கிக்
கிடப்போர் நம்மை மறதிக்கேடென்னும்
சமுத்திரத்தில் ஆழ்ந்து கிடக்கும்படி செய்து
வைத்திருக்கின்றனர். நன்மை தீமை இவை
களை பகுத்தறிந்து கொள்ளக்கூடிய பருவ
காலத்தை நாம் அடைந்திருந்துங்கூட,
அவைகளை அறிந்து கொள்ள சக்தி யற்றவர்
களாயிருக்கின்றோம். இஃதன்றி எவ்வாறு
எங்கு இருந்தோம்? எதற்காக இவ்வுலகின்
கண் அனுப்பப்பட்டோம்? இது போழ்து
யாது செய்து கொண்டிருக்கின்றோம்? இனி
செய்ய வேண்டியதென்னை? என்பனவற்றை
உய்த்துணர்ந்து பார்ப்பதை விட்டு உலகின்
ஆசைகளாய மனை, மக்கள், செல்வம், தலை
மைத்தனம், சங்கை, கீர்த்தி, கண்ணியம்
போன்றவைகளை அடைவதில் ஈடுபட்டுழல்
வதைக்கொண்டு சகல கெடுதி, பாவம், முத
லியவைகளை அகற்றி வைக்கும்படியான
ஆண்டவனது பிரதான வணக்கமாய தொழு
கையினை மறந்து நாம் வெகு தூரத்திலிருக்
கின்றோம். உலக ரட்சகனாகிய ஆண்டவனால்
நம்மீது அளிக்கப்பெற்றுள்ள அளவற்ற பாக்
கியங்களுக்கு நாம் என்றும் அன்னவனுக்கு
நன்றி செலுத்தல் நம்மீது கடமையாக்கப்
பெற்றிருந்தும் அதை நாம் மறந்து ஆழ்ந்
நித்திரையிலிருக்கின்றோம். முஸ்லிமென்றும்
இதர மதஸ்தரென்றும் பிரித்தறிவிக்கும்
அடையாளம் தொழுகை யன்றோ? நா
நேர்வழி பெறுவதற்கென நம்மீதனுப்ப
பெற்ற திரு குர்ஆனில் "ஐந்து நேரத்தி
தொழுகையையும் நிறைவேற்ற வேண்டும்
என்பதை ஐம்பதுக்கு மேற்பட்ட இடத்தி
வலியுறுத்திக் கூறப்பட்டிருப்பதைக் கா
லாம் நம் உலக ரக்ஷகர் காத்தமுன்னபிய்யீ
(ஸல்.) அவர்களும், பெருமைக்குரியோர்
ளாய அவர்களது தோழர்களும் தொழு
யை விடுவதுகொண்டு மானிடன் இஸ்லா
மார்க்கத்தை விட்டுப் புறம்பாகின்றனன்
எனக் கூறியிருக்கின்றார்களே அன்றி, வே
ஏதேனும் கடமைகளை நிறைவேற்றுது வி
வது கொண்டு அன்னோன் சன்மார்க்கத்
விட்டு நீங்கிவிடுகின்றான் எனக் கூற
இல்லை. இதினின்று தொழுகையை வி
பவனையே சன்மார்க்கத்தைவிட்டு நீங்
வனெனக் கூறவேண்டுமே யொழிய நோன்
ஜகாத், போன்ற கடமைகளை நிறைவேற்





திருப்பவனை சன்மார்க்கத்தைவிட்டு நீங்கிய
வன் என அழைக்கலாகாதென்பது புலனு
கின்றது. (இதனால் அக்கடமைகள் மார்க்
கத்தில் அவசியமாக்கப் பெற்றவையாகா
வென்று யூகித்துக்கொள்ளற்க) எனவே,
நோன்பு ஆண்டவனைத்தவிர்த்து மற்றவர்கள்
அறிந்துகொள்ளவியலா வணக்கமாயும்,
பிணி பிரயாணம் போன்ற அசந்தர்ப்ப
மான காலங்களில் நோற்காமல் அவ் அசந்
தர்ப்பம் நீங்கிய காலங்களில் நோற்கக்கூடிய
தாயும், ஜகாத், ஒருவருக்கும் தெரியாமல்
மறைவாகவும் கொடுக்கக்கூடியதாயும் திகழ்
கின்றன. தொழுகையோவெனின், அதை
மறைத்துத் தொழ வியலாததாயும் எத்த
கைய காரணத்தைக் கொண்டும் கைவிடக்
கூடாததாயும் இருக்கின்றது.
கட்டளையை சிரமேற்றாங்கி நடப்பவன்
என்பது முஸ்லிம் என்னும் பதத்தின் கருத்து
ஆகவே ஆண்டவனுடையவும் அவனது
ரஸூலுடையவும் கட்டளைகளைச் சிரமேற்
றாங்கி நடக்கின்ற ஒருவன் முஸ்லிமென
அழைக்கப்படுகின்றான். அவைகட்கு மாற்ற
மாய் நடப்பவனை நம் சன்மார்த்தைவிட்டு
நீங்கியவன் ('காபிர்') எனக்கூறவேண்டும்.
ஆண்டவனது கிருபையால் நமக்களிக்கப்
பெற்றதாயும், நம்மீது முக்கிய கடமையாக்
கப்பெற்ற வணக்கமாயும், எச்சந்தர்ப்பங்களி
லும் நங் கடமையை விட்டும் பிறழத்தகாத
தாயும் உள்ள வணக்கமாய தொழுகையினை
அந்தோ! ஒரு சிறிதும் மதியாமல் விட்டி
ருக்கின்றோம். நம் முஸ்லிம் சமுகத்தினர்
வசிக்கும் ஒவ்வோர் இடத்தையும் பார்ப்போ
மாயின் நூற்றுக்கு 2 அல்லது 3 பேர்களை
யேனும் தொழுகையாளராய்க் காண்ட
அரிதாயுள்ளது. பல பள்ளிவாயில்களோ
வெனின், பாங்கு தொழுகை முதலாய
வணக்கம் புரிதலெவையும் ஆங்கு இல்லா
தொழிந்து பாழடைந்து இருப்பதைக்
காண்கின்றோம். நம் வாணாள் முழுதும் எவ
னுடைய கட்டளைக்கு மாற்றஞ் செய்கின்
றோமோ அவன்றன் முன்னிலையில் நாம் நிற்
குங்காலை நாம் யாது மறு மொழிகூற முடி
யும்? அஞ்ஞான்று யார் நமக் குதவிபுரிவர்
என்பதை எட்டுணையும் உற்றுணர்ந்து பார்க்
கின்றோமில்லை.
மக்களது மா பகைவனாகிய 'இப்லீஸா'ன
வன் ஆண்டவனது ஒரே ஒருவார்த்தைக்கு
மாறு செய்து, 'ஸஜ்தா'ச் செய்வதினின்றும்
விலகிக்கொண்டதின்நிமித்தம் அவனது சதா
காலத்தின் விரோதியானதுகொண்டும் நித்
திய வேதனைக்கும் பாத்தியஸ்தனாகி விட்
டான். தொழுகையை விட்டவனோ குர்ஆன்
ஷரீ'பில் பலவிடங்களில் வற்புறுத்திக் கூறப்
பெற்றுள்ள கட்டளையை ஒவ்வொருநாளும்
எத்தனைமுறை அலட்சியஞ்செய்து ஆண்டவ
னுக்கு மாறாக நடக்கின்றா னென்பதை ஓர்ந்
துணர்ந்து பார்ப்போமாயின் அன்னவன்
அடையும் கதி ஈதென்பது நன்கு புலனாகும்.
ஒவ்வொருநாளும் நம்மீது கடமையாக்கப்
பெற்றுள்ள தொழுகையின் 'பர்லு'களை கணக்
கிட்டுப் பார்ப்போமாயின் தொழுகையை
விட்டவன் ஒவ்வொருநாளும் தம்மீது விதிக்
கப்பெற்ற 152 'பர்லு'களை விடுகின்றவனாகின்
றான். இக் கணக்குப் பிரகாரம் ஒவ்வொரு
மாதத்திலும் 4560 பர்லுகள் இவனால் விடப்
படுகின்றன. ஒருவருஷத்தில் ஆண்டவனது
53808 கடமைகளை இன்னோன் நிறைவேற்
றாதுவிடுகின்றான். ஒவ்வொரு தொழுகையை
விடுவதுகொண்டு அளவற்ற வாஜிபு'களையும்
நிறைவேற்றாமலாய் விடுகின்றது. ஈதன்றி
தொழுகையின் இருப்பில் 'அத்தஹிய்யாத்து'
ஓதும் போழ்து அஸ்ஸலாமு அலைனா வ அலா
இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன்'' அதாவது:—
'ஆண்டவனது கிருபை நம்மீதும், நல்லடி
யார்கள் மீதும் உண்டாவதாகுக' என ஆண்
டவன் பால் பிரார்த்தனைப் புரிந்து ஒவ்வொரு
நாளும் 'அன்பியாக்கள்,' ஸாலிஹீன்கள்
, ஷுஹதாக்கள், மலாயிகத்துகள் இன்னோர்
க்கு ஆற்றவேண்டி கடமைகளை நிறைவேற்
றாது விடுகின்றான். அன்றியும் " அஸ்ஸலாமு
அலைக்க யா அய்யுஹன் நபிய்யு வ ரஹ்மத்
துல்லாஹி வ பரகாத் துஹு'' அதாவது:—
நபீ அவர்களே! தங்கள்மீது ஆண்டவனது
கிருபையும் அருளும் உண்டாவதாகுக! என
பிரார்த்தனைப் புரிய வேண்டிய கடமையை
யும் பாழ்படுத்தி விடுகின்றான்.
தொழுகையற்றவன் தன் வாணாள் முழு
தும் ஆண்டவனது கட்டளைக்கு மாறுசெய்து,
வேறு எவ் ஆதரவுகொண்டு தொழுகையை
விட்டிருக்கின்றான். அன்னவன் இமாம்
'ஷாபிஈ' (ரஹ்.) இமாம் 'மாலிகீ' (ரஹ்.)
இவர்களிடம் கொல்லப்படுவதற்குப் பாத்தி
யஸ்தனாகவும், இமாமுல் அஃலம் அபூ
ஹனீபா (ரஹ்.) அவர்களிடம் சிறைச்சாலை

யில் அடைத்து தண்டனை அடைய அருகதை யுடையோனுகவும் ஆகின்ருன். உண்மையில் தொழுகையானது இம்மை மறுமைப் பேறு கட்கு சான்ருயும் இறைவனது பொருத்தம், விருப்பம் இவைகளை மானிடனுக்கு அளிக்க வல்லதாயு மிருக்கின்றது. தொழுகையை விட்டிருப்பவனை விளித்து "என் கட்டளையை மீறிநடக்கும் அடியானே! என்னுடைய இப்பூமி, வானம், என் அதிகாரம் இவைகளைவிட்டு நீங்கிப்போய் என்னினும் வேறுநாயகனைத் தேடிக்கொள், உன்மீது யான் வெறுப்புற்றிருக்கின்றேன்" என இறைவன் கூறுகின்ருன். "எவன் தொழுகையை நிறைவேற்றவில்லையோ அவன் என் கூட்டத்தில் சேர்ந்தவனல்லன்" என பெருமானுர் நபிகள் (ஸல்.) அவர்கள் கூறியிருக்கின்ருர்கள்.

எனவே, எல்லாம் வல்ல இறை நம் மனோர்க்கும் நேரான வழியைக் காட்டி ஒழுங்கான முறையில் தொழுகையை நிறைவேற்று தற்குரிய ஆற்றலளித்து நற்கிருபை பாலிப் பானுக!

---

# இமாம் கஸ்ஸாலி (ரஹ்.) அவர்களது உபதேசம்.

ஹிபாஜத்துல் இஸ்லாம், ஹஜ்ரத் இமாம் கஸ்ஸாலி (ரஹ்.) அவர்கள் கல்வியில் தேர்ச்சியுற்று மிக்க பிரக்யாதிபெற்ற மஹானுக விளங்கினரென்பது யாவருமறிந்ததே. அப்பெரியார் தங்களது மாணவரொருவருக்கு எழுதியனுப்பிய உபதேசங்களில் சிலவற்றை நண்பர்களின் பார்வைக்குக் கீழே தருகின்றேன்:—

" ஆண்டவனது பாதையிற் செல்லவேண்டுமென்றெண்ணுபவனுக்கு இன்றியமையாதவை யாவை "? என அம்மாணவர் வினவியமைக்கு, ஹஜ்ரத் அவர்கள் அளித்த விடையாவது:—முதலாவதாக எத்தகைய நூதன அனுஷ்டானங்களும், கெடுதிகளும் கலந்திராத (இஃதிகாது) நிர்ணயமும், இரண்டாவதாக மறுமுறையும் பாவத்தின் பக்கல்கூட திரும்பிப்பாராத விதமாக உள்ள (தௌபா) பாவமன்னிப்புத் தேடுதலும், மூன்ருவதாக மானிடர்களிடத்தில் மித்திரனுயினுஞ்சரி சத்துருவாயினுஞ்சரி அவர்களிடத்தில் ஒரேவிதமாக நடந்துகொள்ளுதலும், நான்காவதாக மார்க்கக் கல்வியிலிருந்து இன்னது கெட்டது இன்னது நல்லது யெனத் தெரிந்து கொள்வதற்குப் போதிய கல்வியைக் கற்றுக்கொள்ளுதலும் ஒவ்வொருவனுக்கு அவசியமாகும். ஈதன்றி மற்றகலைகளில் அவனை ஈடேற்றமாக்கி வைக்கக் கூடியதில் சம்பந்தப்பட்டவைகளை கற்றுக் கொள்ளவேண்டும். உதாரணமாக:— அல்லாமா ஷிப்லீ(ரஹ்) அவர்கள் 400உபாத்தியாயர்களிடம் 4000 ஹதீதுகளைப் படித்திருந்தும், அதில் ஒரே ஒரு ஹதீதை மட்டும் தங்களை ஈடேற்றமாக்கி வைக்கப்போதுமெனவும், அதில் சகல கலாஞானங்களும் பொதிந்துள்ளன எனவும் தெரிந்தெடுத்திருக்கின்றனர். அவ்ஹதீதாவது "நீ, இம்மையில் எத்தனை நாள் ஜீவித்திருப்பாயோ அத்தனை நாளைக்கு தேவையானவைகளையும், மறுமையில் எத்தனை நாள் வரையிருப்பாயோ அதற்குரிய அமல்களையும், ஆண்டவனிடத்தில் எந்த அளவு பெற்றுக்கொள்ளநாடுகின்ருயோ அந்த அளவுக்குள்ள நன்மைகளையும், நகரத்தின் வேதனையை உன்னுல் எத்துணை தூரம் சகிக்க முடியுமோ அதற்குரிய வேலைகளையும் செய்து கொள்" என்பதே.

இந்த ஹதீதினுல் நீங்கள் ஓர் பெரிய ஆ[…]மாயிருக்கவேண்டிய தவசியமில்லை யென்ப[…] புலனுகும். இதன் கீழ் குறிப்பிடப்படும் ஒ[…] சம்பவத்தை உய்த்துணர்ந்து பார்ப்பீர்கள[…]யின் யான் கூறுவதன் உண்மை நன்கு பு[…]னுகும். அஃதாவது :—ஹஜ்ரத், ஷகீ[…] பல்கீ (ரஹ்.) அவர்கள் ஒருநாள் தங்கள[…] மாணவராய ஹாத்தமெ அஸம் (ரஹ்[…] அவர்களிடம் "நீங்கள் எத்தனை வருட[…]களாக என்னிடமிருந்து கல்வி பயின்று வ[…]கின்றீர்கள்" எனக் கேட்டதற்கு "33 வருட[…]களாக கற்றுவருகிறேன் எனக் கூறின[…]கள். "இத்தனை காலமாக எம்மாத்திர[…] கலைபயின்று யாது பலன் கண்டீர்?" எ[…]



[…]ஹஜ்ரத் அவர்கள் வினவியதற்கு 'எட்டே' [ப]லன்கள் தாம் அடைந்துள்ளேன், அவ் எட்[…]டும் தான் கல்வியைக் கற்றுக்கொண்டதின் பலனுகும்" என ஹாத்தமெ அஸம் (ரஹ்.) அவர்கள் விடை பகர்ந்தமைக் கேட்டு வியப்[…]புற்று யான் "உங்களுக்கு கல்வி பயிற்று[…]வதில் எனது வாணுளின் ஒரு பாகத்தைப் போக்கியிருக்க நீங்கள் எட்டே எட்டு விஷயத்தைக் கற்றுக் கொண்டிருப்பதாகச் சொல்வது பெரும் ஆச்சரியத்தை விளைக்கின்றது" என ஹஜ்ரத் அவர்கள் கூறியதற்கு ஹாத்தமெ அஸம் (ரஹ்.) அவர்கள் கூறியதாவது:—உஸ்தாத் அவர்களே! தாங்கள் உண்மையைக் கேட்பீர்களாயின் நான் கற்றுக்கொண்டது இவ்வளவுதான் எனக் கூறுவதுடன் இதைப்பார்க்கினும் அதிகமாக கற்றுக்கொள்ள எனக்கு விருப்பமில்லையென்றே பகர்வேன்; இந்த அளவே நான் ஈடேற்றம் பெறப் போதியனவாயிருக்கின்றது; இதைவிட அதிகமாய்க்கற்றுக்கொள்ளல் வீணுன காரியமாகுமென அறிகின்றேன் என்பதே.

இதைக் கேட்டு ஹஸ்ரத் அவர்கள் "அவ் எட்டு பிரயோசனங்கள் யாவை? யென விவரமாகக் கூறும்படி கேட்க, ஹாத்தமெ அஸம் அவர்கள் கூறிய மறுமொழியாவது:-

முதலாவது நான் பார்த்த மட்டில் உலகத்தில் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு வஸ்து பிரியமாயிருக்கிறது. அவைகளிற் [சி]ல அவனது மரணம் வரை அவனேடிருக்கின்றது; சில கப்றுவரை அவனுடன் வருவ[தா]கயிருக்கின்றது. இவைகளில் யான் [ய]ோசித்துப்பார்த்து என் மரணத்திற்குப் [பி]ன் எனக்குத் துணையாகவும் என் துக்[க]த்தை நிவர்த்திக்கக்கூடியதாகவும் உள்ள [ஒ]ரு வஸ்துவை தெரிந்தெடுத்துள்ளேன். அஃதாவது 'ஸாலிஹான அமல்' (நற்கருமங்[க]ள் புரிவது) எனக் கூறியவுடன் நல்ல வேலை [செ]ய்தீர்' என ஹஜ்ரத் ஷகீக் (ரஹ்.) அவர்[க]ள் கூறினுர்கள்.

இரண்டாவது :—உலகத்திலுள்ளோரனை[வ]ரும் தங்களது இச்சைக்கு வழிப்பட்டு [நட]ப்பவர்களாகப் பார்த்தேன். ஆனுல் [எ]வன் இறைவனது சமுகத்தில் நிற்க[வே]ண்டுமென்பதை எண்ணி மனதில் அச்சங் [கொ]ண்டு தன் மன இச்சைக்கு இடங்கொ[டா]து நடந்துகொண்டானே அன்னவன் அடையும் கதி சொர்க்கமாயிருக்கும்" என்னும் திருவசனம் என் பார்வைக் கெட்டியவுடன் ஆண்டவன் கூறியிருப்பது உண்மையென்றெண்ணி எனது நப்ஸுக்கு (சிந்தைக்கு) கஷ்டம் கொடுக்க ஆரம்பித்து ஆண்டவனது வழிபாட்டில் ஒடுக்கிவைத்துவிட்டேனென கூறியவுடன் "ஆண்டவன் உமக்கு கிருபை புரிவானுக!" என ஹஜ்ரத் ஷகீகே பல்கீ (ரஹ்.) அவர்கள் கூறினுர்கள்.

மூன்ருவது:—உலகத்திலுண்டாய மானிடர்களடங்கலும் பெரும் பெரும் கஷ்டங்களடைந்து உலகத்திலுள்ள வஸ்துக்களில் ஏதேனு மொன்றைப்பெற்று தாங்கள் மேலான ஒரு வஸ்துவை அடைந்து விட்டதாக பெரும் மகிழ்ச்சி கொள்வதைப் பார்த்தேன். ஆனுல் "உங்களிடமிருக்கும்வஸ்துக்களெல்லாம் அழிந்து போகக்கூடியதாயும்; இறைவன்பாலுள்ளவைகளடங்கலும் சதாகாலமும் நீடித்திருக்கக்கூடியதாயும் இருக்கின்ற"தென்ற நாயனது வாக்கியத்தைப் பார்த்து நான் பல்லாண்டுகளாய்ச் சேமித்து வைத்திருந்த ஐஸ்வரியம் முழுதையும் ஆண்டவன்பாதையில் ஏழைகட்கு கொடுத்து, சதாகாலமும் அழியாதிருக்கும் மறுமையின் பக்கல் யான் செல்வதற்கு அவை உதவியாயிருக்குமென ஆண்டவனிடம் அமானிதமாக வைத்துள்ளேன்" எனக்கூறியவுடன் ஹஜ்ரத் ஷகீக் (ரஹ்.) அவர்கள் "நல்ல வேலை செய்தீர் என பகர்ந்தார்கள்.

நான்காவது:— உலகத்தில் காணப்படும், மானிடர்களிற் சிலர் தாம் ஜனக்கட்டினும் குடும்பப் பெருக்கினும் மிகுந்திருக்கின்ருேமென்றும், சிலர் தம்மிடம் எண்ணிறந்த ஐஸ்வரியமும் வீடுநிறையக் குழந்தைகளும் பெற்றுளோம் என்றும், மற்றுஞ்சிலர் தாம் ஒருதலைவராகவோ, அரசராகவோ இருக்கின்ருேமென்றும் பெருமை பேசித் திரிவதைப்பார்த்தேன். "ஆனுல் உங்களில் ஆண்டவனை மிக்கப் பயந்து நடந்தவர்கள் தான் உங்களில் மிக்க சங்கையானவர்கள்" என்னும் ஆண்டவனது வாக்கியத்தைப் பார்த்தவுடன் அவன் சொல்வது தான் உண்மை; உலகிலுள்ளோரின் எண்ணமெல்லாம் வீணுனதெனநினைத்து அவனுக்குப் பயந்து நடப்பதைத் தெரிந்து கொண்டேன்" எனச்சொன்னவுடன் ஹஸ்ரத் ஷகீக் (ரஹ்.) அவர்கள் "நல்ல வேலை செய்தீர் என கூறினுர்கள்.

ஐந்தாவது:—பொருமையால் கோள் புகன்றும், ஒருவருடைய தலைமையின் பேரிலும் சங்கை, மரியாதை, கல்வி, இவைகளை அளிக்கப் பெற்றிருப்பதைப் பார்த்தமையின் பேரிலும் பொருமை கொண்டு புறம் கூறியும்திரிவதைப் பார்த்தேன். ஆனால் "நாம் 'உலக வாழ்க்கையில் அவர்களது காலக்ஷேபத்தை ஏற்கெனவே நிர்ணயித்து விட்டோம்'' என இறைவன் இயம்பியதைப் பார்த்தவுடன் ஒவ்வொரு வஸ்துவும் குறிப்பிட்ட ஒவ்வொரு காலத்திலும் ஏற்படும்; அதில் எவருக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லையெனமுடிவு செய்து கொண்டு அது முதல் எவர் மீதும் யான் பொருமைப் படுவதை விட்டொழித்து யாவருடனும் சிநேகப் பான்மை காட்டி வருகின்றேன் என கூறியதைக் கேட்ட ஹஜ்ரத் அவர்கள் "நல்ல வேலை செய்தீர்'' என கூறினார்கள்.

ஆறாவது:—உலகின் கண் பல்வேறு காரணங்களால் அநேகர் ஒருவர்க் கொருவர் பகைமை கொண்டிருப்பதைப் பார்த்தேன். ஆனால் "நிச்சயமாக ஷைத்தானனவன் உங்களின்பகைவன்; அவனை நீங்கள் விரோதியாக்கிக்கொள்ளுங்க'' ளென்ற ஆண்டவனது கட்டளையைப் பார்த்தவுடன் நான் அன்னவனையே பகைவனாகவெண்ணி அவனது ஒவ்வோர் வார்த்தைக்கும் மாற்றஞ் செய்து, ஆண்டவனுக்கு வழிப்படுவதில் பராக்காவதுடன் இதுதான் உண்மையான பாதை யெனவும் தெரிந்து கொண்டேன்'' என சொன்னவுடன் ஹஸ்ரத் அவர்கள் "நல்ல வேலைசெய்தீர்'' என கூறி மகிழ்ந்தார்கள்.

ஏழாவது:— மானிடர்கள் தங்களது 'ரிஸ்க்' (இரணம்) தேடுவதில் முயற்சித்து மார்க்க விலக்கானவும் சந்தேகமானதுமான விஷயங்களில் உழன்று, தங்களைத் தாழ்மைப் படுத்திக் கொள்வதைப் பார்த்தேன். ஆனால் "உலகின் கண் ஊறித் திரியும் ஒவ்வொரு வஸ்துக்குரிய ரிஸ்கும் (இரணம்) ஆண்டவனது பொறுப்பி லிருக்கின்றது'' என்ற அவனின் திருமொழியைப் பார்த்தவுடன் எதனுடைய ரிஸ்க்கை ஆண்டவன் ஏற்றுக் கொண்டிருக்கின்றானோ அதில் யான் சேர்ந்து விடவேண்டுமென்றெண்ணி, என் மனத்தின் கவலையை நீக்கி, அவனது வணக்கத்தின் பக்கல் திரும்பிவிட்டேன்'' என கூறியவுடன் ஹஸ்ரத் அவர்கள் "நல்லவேலை செய்தீர்'' எனக் கூறினார்கள்.

எட்டாவது:— இப் பூவுலகின் கண் ஒவ்வொரு காரியத்திலும் மானிடர்கள் மீது நம்பிக்கை வைப்பதாகப் பார்க்கின்றேன் ஆனால் "எவன் ஆண்டவன் பால் நம்பிக்கை கொள்கிறானோ அன்னவனுக்கு ஆண்டவனே போதுமானவன்'' என ஆண்டவனது வாக்கியத்தைப் பார்த்து நான் எல்லோரையும் விட்டு உண்மையாக 'ரிஸ்க்' (இரணம்) அளிக்கக்கூடிய இறைவன் பால் நம்பிக்கை கொண்டு அவனே எனக்கு போதுமானவனென நினைத்துக் கொண்டேன் என மொழிந்தவுடன் "ஹாத்தமே! 'ஆண்டவன்' உங்களுக்கு நல்லுதவி புரிவானாக! யான் 'தவ்ருத்,' இன்ஜீல்,' ஜபூர்,' குர் ஆன் ஷரீப் ஆகிய வேதங்களைப் பார்த்ததில் அவ் வாகமங்களிற் கூறப் பெற்றுள்ள உபதேச மடங்கலும் இவ் எட்டு கருமங்களில் நிலைபெறுவதாகத் தோன்றுகின்றன. இவ் எட்டு கருமங்களையும் ஒட்டி நடக்கின்றவன் நான்கு வேதங்களையும் பின்பற்றி நடந்தவன் போலாகின்றான்'' என ஹஜ்ரத், ஷகீக் பல்கீ (ரஹ்) அவர்கள் கூறினார்கள்.

இச் சம்பவத்தினின்றும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டியதாவது அதிகமாகக்கல்வி பயில வேண்டுமென்பது அவசியமில்லை; போதியவரை கல்விபயின்று, பயின்றவாறு காரியங்களை அநுஷ்டிக்க வேண்டும்'' என்பதே.

---

## காலண்டர் வரவு.

கிள்ளான் பிரபல வியாபாரிகளான மெஸ்ஸர்ஸ் M. பீர் முஹம்மத் A. ஜமால் முஹம்மத் அண் கம்பெனியாரிடமிருந்து தினம் ஒரு ஷீட் கிழிக்கக்கூடிய அட்டைக் காலண்டர் ஒன்று வரப் பெற்றோம். அவ் அட்டையின் மத்தியில் ஸிலாங்கூர் ஸுல் தான் அவர்களது அரண்மனைப் படம் திகழ்கின்றது. ஷை கம்பெனியாரின் கிளை ஆபீஸ் விலாசங்களும், அவ்வவ் விலாசங்களுக்குரிய தந்தி அட்ரஸ், டெலிபோன் எண்களும், ஷை ... யாரிடம் கிடைக்கும் பொருட்களும் குறிப்பிடப் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு ஷீட்டின் பின்புறத்தில் அறிஞர்களின் அமுத மொழிகள் ஆங்கிலப் பாஷையால் அமைக்கப் பெற்றிருப்பவை பாராட்டத்தக்கது.

# நமது க்ஷீண நிலை.

இந்தியமுஸ்லிம்கள் மிகவும் க்ஷீண நிலையில் உள்ளார்கள் என்பதை ஒருவரும் மறுக்க முடியாது. அரசிழந்த ஆங்கே அடிமைகளானோம். அடிமைகளாய் இருந்து வாழ்ந்து வரும் இக்காலத்தில் நாம் எத்துணைச் செல்வம் பெற்று வாழினும், தாழ்ந்த வாழ்க்கையாகத்தானாகின்றது. "நீங்கள் மூமின்களாயின் நீங்களே புகழ்சிறந்தோர்கள்'' என்று திருமறை இயம்புகின்றது. எனவே, நாம் மூமின்களாக இருந்து வந்தக்கால் நமக்கு எல்லா வலிமையும் எல்லாச் சிறப்பும் எல்லாச் சுகங்களும் கிட்டின; மார்க்கத்தில் ஊன்றிய பற்றும், மார்க்கப் படிப்பில் நிறைந்த அறிவும், மார்க்கப் பிரசாரமும், மார்க்க ஒழுக்கமும் நம்மவர்களில் குன்றக் குன்ற, நம்மவர் க்ஷீணநிலை எய்தினர். சிலர் ஆங்கிலங்கற்று, ஆங்கில உடை தரித்து, ஆங்கில ஊண் உண்டு, ஆங்கில அரசிற்கு அடிபணிந்து நிற்றலால் நாம் நல்ல நிலைமையை ...ய்துதல் இயலும் என்றுகருதி வந்தனர். ...ர் ஸையத் அஹ்மத் அவர்கள் இத்தகைய ...ம்பிக்கையால், ஆங்கிலத்தை நம் மக்கட் ...டைப்பரப்பியும் புகட்டற்கு முயற்சித்தார். ஆங்கிலங்கற்ற நம் மக்களிற் பெரும்பான்மையார் இஸ்லாத்தின் உண்மையை அறிந்து கொள்ளாதவர்களாய் போலி ஆங்கிலேயர்கள்போன்று வேடம்பூண்டனரேயன்றி, முஸ்லிம்களின் பெருமைக்கும் புகழுக்கும் பாத்திரர்களாகவில்லை என்பது கண்கூடு. ஆங்கிலங் கற்ற மக்கள் நாளுக்குநாள் பகுத்தறிவு என்பதும், விஞ்ஞானம் என்பதும், திருமறையில் இது ஒப்பத்தக்கதா என்பதும், ஹதீஸில் இது ஏற்புடையது தானோ என்பதும், திருச்சட்டங்களில் இவை இக்காலத்திற் ...கவே என்பதும் ஆயிற்று. உண்மையான படிப்பு நம் மார்க்கத்தில்தான் உள்ளது. திருமறை, திருவாசகம், திருச்சட்டங்கள் ...ன்ற ஒருவரின் படிப்பு இகத்திற்கும் பரத்திற்கும் போதியதாய் இருக்க, இத்தகைய படிப்பு அக்காலத்தில் அரசுரிமையை நம்மவர்கட்கு நல்கி இருக்க, இத்தகைய படிப்பால் வீரர்கள் என்ன, அறிஞர் என்ன, அமைச்சர் என்ன, மதப்பிரசாரகர்கள் என்ன, வணிகர் என்ன, இன்னோரன்ன பல துறைப் பெருமக்களை வளர்த்துக் கொடுத்திருக்க, மார்க்கப் படிப்பு போதியதன்றென்றும், ஆங்கிலக்கல்வியே அவசியம் என்றும் கூறுதல் நகைப்பிற் கிடமாய் இருப்பதோடு மடமையை அடிப் படையாய்க் கொண்ட கூற்றாயும் உள்ளது.

ஆங்கிலக் கல்வி அவசியமன்று என்று நாம் செப்ப முன்வருகின்றோமன்று. ஆங்கிலக் கல்வியோ, ஜர்மன்கல்வியோ, ருஷ்யக் கல்வியோ, மற்று வேறு எவ்விதக் கல்வியோ நமது அறிவை விசாலிக்கக்கூடியனவாய் இருக்கலாம். இக்காலத்தில் அவை ஒருவாறு நலன் பயக்கத் தக்கனவாம் என ஆங்கிலம் படித்த ஞான்றே இழந்த அரசுரிமையை நாம் அடைதல் கூடுமென்றோ, உண்மையாளர்களாய்த் திகழ்வோம் என்றோ கூறுதல் எவ்வாறு பொருந்தும் என்று கேட்கின்றோம். தற்காலத்தில், நம்முள் ஒற்றுமை குலைந்ததின் காரணத்தாலும், உண்மைக் கட்டளைகளை உள்ளவாறு நிறைவேற்றப் பின்வாங்கிய காரணத்தாலும் அரசிழந்த அடிமைகளாய் இருக்கும் தற்காலத்தில், நமக்கு இன்றியமையாதது, வேண்டப்படுவது இஸ்லாம் ஒன்றுதான். எத்துணைக் கெத்துணை நாம் அனைவரும் நமது வாழ்க்கையில் சிறந்து இறைவனின் அடிமைகளாகின்றோமோ அத்துணைக் கத்துணை பிறரை அடிமை கொள்ளுபவர்களும்ஆவோம் என்பதற்குத் தலைசிறந்த நம் திருமறையே நற்சான்று பகர்கின்றது.

நிற்க, ஆங்கிலம். கற்றுக்கொடுப்பதைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்:—நமது அரசாங்கத்தினர் நம்மை மார்க்க ஞானத்தில் மேம்பட்டவர்களாய்ச் செய்யும் கருத்துடையவர்களல்லர். பிறமதஸ்தரிடம் இதனை எதிர்பார்த்தலும், பிறமத அரசாங்கத்தால் நமக்கு மார்க்க அறிவு வளத்தை ஊட்டும் என்று கூறப்படும் உறுதியை நம்புதலும் வீணான செயலாகும். நமது அரசாங்கம் நம் இந்தி

யாவினின்றும் எதிர்பார்ப்பது இரண்டு. சம்பளத்திற்குத் தங்கள் ஆக்ரமப் போர்களில் ஈடுபடக்கூடிய கூலிவீரர்கள்; சம்பளத்திற்குத் தங்கள்பொருளாதார இயல்பின் மலிந்த சட்டங்களை நிறைவேற்றக்கூடிய கூலி உத்தியோகஸ்தர்கள். இவர்கள் தாம் நம் அரசாங்கத்திற்கு அவசியமானவர்கள். முஸ்லிம் ஒருவ்ன் வீரனாயின் என்? கவிஞன் ஆயின் என்? மார்க்க ஒழுக்கம் படிப்பு நிறைந்த பெரியோர் ஆயின் என்? இவர்களால் கிறிஸ்துவ மத அரசாங்கம் மகிழ்வெய்துமோ? மகிழ் வெய்துவதாக அவ்வரசாங்கமே கூறினும் அதுதான் நம்பத்தகும் கூற்றாமோ? எனவே, நமக்குக் கற்றுக்கொடுக்கப்படும் ஆங்கிலக் கல்வியில் அரசாங்கக் கூலி உத்தியோகஸ்தர்களாக வேண்டியளவு படிப்பினை தான் உள்ளது. இந்து தேச சரித்திரத்தை எடுத்துக்கொள்வோம். சின்னஞ் சிறு பிள்ளைப் பருவத்தில் ஒரு ஆங்கிலேய சரித்திர (அரசாங்கப் பிரசார?) ஆசிரியரால் இயற்றப் பெற்ற ஒரு நூலைப்படிக்கின்றனர். அதில்முஸ்லிம்களும், மற்றும் உள்ள இந்தியர்களும் மிக மிகக் கொடியவர்களாகவும், திறமை யற்றவர்களாகவும் விளங்குகின்றனர். இந்துக்கட்கும் முஸ்லிம்கட்கும் நடைபெற்ற பெரும்போர்களிற் பெரும்பான்மையான வெற்றிகளை முஸ்லிம்கள் பெற்றிருப்பதாகக் கூறப்படுகின்றது. இஃதேபோல் முஸ்லிம்கட்கும் ஆங்கிலேயர்கட்கும் நடைபெற்ற பெரும்போர்களிற் பெரும்பான்மையாய் வெள்ளையர்களே வெற்றிபெற்றவர்களாகக் கூறப்படுகின்றது. இதன் கருத்து பெருந்திரளான இந்து அரசர்களின் படைகளைச் ஜெயித்த, அத்துணை வலிமை பொருந்திய முஸ்லிம்களையும் ஜெயித்த மிகப் பெரிய வல்லமை பொருந்தியவர்களாம் வெள்ளையர் என்பதேயாம். சின்னஞ் சிறு பிள்ளைகள் இப்பொய்த் 'தேச சரித்திரங்களை'ப் பயில்கின்றனர். மார்க்கத்திற்கு உயிர்கொடுத்த பெருந் தியாகியான திப்பு முதலிய சுல்தான்கள் கொடியவர்கள் என்றும், திப்புவை அடக்கவேண்டியது உலக நலத்தைப் பொறுத்து, அவசியமாயிற்றென்றும், திப்புவின் படைகள் எல்லாம் வெள்ளைப் படைகளைக் கண்ட மாத்திரத்தில் சூரியனைக் கண்ட பனிபோல் இருந்த இடம் தெரியாமற் போயின என்றும் இத் தேச சரித்திரங்கள்' கூற்றியம்ப, நம் சிறுவர்கள் இதனை உண்மையென்று நம்பி, வெள்ளையர்களைப் பெரியவர்களாகவும், வீரர்களாகவும், அறி[...]ஞர்களாகவும் மதிக்கத் தலைப்படுகின்றனர். இளமையில் மனத்தில் பதிந்த ஓர் எண்ணம் பிற்காலத்தில் அகல்வது அசாத்தியமாயிருத்தலால், ஆங்கிலக் கல்வியால் நஞ் சிறுவர்கள் கடைத்தேற வழியுள்ளதோ என்பதை அன்[...]பர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக. இஃதே போன்று நமது பள்ளிக்கூடங்களில் கணக்காயர்கட்கு உரிய போதனை கலை[...] கற்றுக் கொடுக்கப்படுகின்றன. அறிவு விசாலமும், ஒழுக்க மேம்பாடும், மார்க்கப்பற்றும் ஆண்டவன்பால் அன்பும் வலியுறுத்தக்கூடி[...] எத்தகைய படிப்பினையும் புகட்டப்படு[...]தில்லை. "நீங்கள் உண்மை மூமின்களா[...] இருப்பின் புகழ் சிறந்தவர்களாவீர்கள்" என்[...]பதற்கு இலக்கான எத்தகைய படிப்பும் இ[...] காலத்து மாணவர்கட்கு புகட்டப்படா[...] காரணம்பற்றியே நாம் இன்றைக்கும் தாழ்[...] நிலைமையில் இருக்கின்றோம். எனவே, நா[...] நன்னிலைமையை அடைய வேண்டுமாயின் இழந்த அரசியல் செல்வாக்கைப் பெறல் அ[...]சியமாயின், நமக்கு வேண்டியவை ஒற்றுமை[...]யும் உண்மை மார்க்க அறிவுமாகும். எ[...]துணை இவ்வழியில் நாம் முற்படுகின்றோமோ அத்துணைச் சீக்கிரத்தில் நாம் மீண்[...] மேன்மை அடைதல் கூடும். மேம்படுதலும் கீழ்ப்படுதலும் நம் கையிற்றான் உள[...] போலிப் படிப்பும் போலி நாகரிகத்தில் [...] மோகமும் கொண்டுழலும் மக்கள் இதனை நன்கு சிந்திப்பார்களாக. உண்மை அன்[...]கள் மென்மேலும் நன்னெறியில் இலங்குவ[...]களாக.

## ஹஜ்ஜு யாத்திரை.

சேலம் ஜனாப்களாய S. K. I. அப்துல் ரஹ்மான் ஸையித் அமீர் ஸாஹிபு, மு. ஜி[...] உத்தீன் ஸாஹிபு ஆகிய சனவான்கள் ஹஜ்ஜுக் கடமையை நிறைவேற்றுவான் வேண்[...] 15-3-31 ஞாயிற்றுக்கிழமை காலை சென்னையை விட்டு பம்பாய் பிரயாணமானார்கள். அ[...] ௐமயம் ஸ்டேஷனுக்கு ஏராளமான ஜனங்கள் விஜயஞ்செய்து மிக்க ஆரவாரத்துடன் அ[...]களை வழியனுப்பிவைத்தார்கள்.



# ஓர் இனிய சம்பாஷணை.

II

(அபுல் ஹஸன் மதராஸீ வரைவது)

முனவ்வர்கான்:—அன்வர்! உன்னைப்பார்[...]து ஒரு மாதக் காலமாயிற்று. ஏதேனும் [வி]சேடம் உண்டா?

அன்வர்கான்:—விசேடம் ஒன்று மில்லை, [எ]னினும் இந்த ஒரு மாதக் காலமாக என் [வ]ாழ்க்கையிலே ஓர் மாறுதல் ஏற்பட்டு விட்[ட]து. பெரும் சந்தேகங்களும் சஞ்சலங்[க]ளும் என் மனத்தில் குடிகொண்டுவிட்டன. [அ]மைதியற்று விட்டேன்.

முன:—சந்தேகங்களும் சஞ்சலங்களும்; [அ]மைதியற்றுவிட்டாய். எதுபற்றியோ?

அன்:—யான் சில காலமாக நம்பி வந்த [கொ]ள்கைகளை நீ சென்ற மாதத்தில் அடி[யோ]டு மாற்றி விட்டாய். பழக்கம் கொடி[ய]து பார்; கோழி பாறையைச் சீய்க்கும் [எ]ன்றபடி ஒரு துறையில் பழகி வந்த என் [ம]னத்தில் உன்னால் ஓர் மாற்ற முண்டாய் [வி]ட்டதும் அமைதி குலைந்து விட்டது.

முன:—நாம் இருவரும் சென்ற மாதம் பிர[...]ல ஒரு சீர்திருத்தக்காரரைப் பற்றியன்றோ [ச]ம்[ஷி]க்கொண்டிருந்தோம்.

அன்:—ஆம்; தா. இ. ஆசிரியர் பா. தா. [எ]ன்பவரைப் பற்றி.

முன:—அதற்கென்ன?

அன்:—ஒன்றுமில்லை; நீ கூறிய அளவில் [எ]ல்லாம் உண்மையாமோ என்பது என் சந்[தே]கம்?

முன:—எப்பொழுதும் உனக்குச் சந்தேதானா? உனக்குத் தெரியவேண்டியது [எ]ன்ன? அதனைக் கேள்; முடிந்தால் சமாதா[ன]ம் கூறுகின்றேன்.

அன்:—நந் தென்னாட்டில் நஞ்சமுகத்திற்[கு]ள் சீர்திருத்தக்காரர்கள் என்னும் பெய[ரை]த் தாங்கிக்கொண்டு, சீர்திருத்த இயக்கம் [ந]ிந்து வருகின்றார்களல்லவா?

முன:—ஆம்.

அன்:—இதற்கு அடிப்படையாகவும் ஆதா[ர]மாகவும் உள்ளவர் பா. தா. வன்றோ?

முன:—அதற்கென்ன சந்தேகம்? லாகூரில் உள்ள அஹ்மதிய்யாக்குழுவினராகவும் இருத்தல் கூடும்.

அன்:—அஹ்மதிய்யாக்களா? அவர்கட்கும் பா. தா.வுக்கும் என்ன சம்பந்தம்?

முன:—அதனைப்பற்றிப் பின்னர் தெரிவிக்கின்றேன். இப்பொழுது நீ கேட்க வந்தது என்ன?

அன்:—இல்லை; இல்லை. பா. தா. சீர்திருத்தக்காரராய் இருத்தலால் அவரும் காப்பி யடித்தாரா என்பது இன்னொரு சந்தேகம்!

முன:—எனப்பா! கோர்ட்டு நடவடிக்கைகளை "ஹிபாஜத்துல் இஸ்லாம்" பத்திரிகையின் வெளியீடுகளின் வாயிலாகச் செம்மையாய்ப்படித்திருந்தும் நீஇந்த சந்தேகத்திற்கு ஆளாதல் எவ்வாற்றாலோ? சரிவரப் படிக்கவில்லைபோலும்!

அன்:—படித்துப் பார்த்தேன்; என்றாலும் பா. தாவின் மீது பொறாமை கொண்டு வேறு சிலர் இக்கேஸைக் கிளப்பிவிட்டு வேலைசெய்திருக்கலாமோ என்பது எனது சந்தேகம்.

முன:—அன்வர்! பா. தா. வின் மீது பொறாமை கொள்வதற்குப் பா. தா. என்பவர் பணத்தில் சிறந்தவரா?

அன்:—இல்லை.

முன:—அல்லது படிப்பில் பிரக்யாதி பெற்றவரா?

அன்:—இல்லை.

முன:—அல்லது ஒழுக்கத்தில் ஒப்பற்றவரா?

அன்:—இல்லை.

முன:—எனவே, இவர்பால் பிறர் பொறாமைப் படைத்தற்கு அங்கு ஒன்றும் பண்டம் இல்லையே. ஒருவன் தன்மீது பிறர் பொறாமை கொண்டதாகக் கூறுவது எல்லாம் தற்புகழ்ச்சிப் பேச்சின் தினுசே யாகும். தான் ஏதோ சில துறைகளில் உயர்வாக இருப்பதாகவும் அதனால் பிறர் பொறாமை கொள்வதாகவும்

அன்றோ ஏற்பட்டு விடுகின்றது. ஆதலால் சூனியமான பேர்வழிகள் எல்லாம் ''என்மீது அவன் பொருமை கொள்கின்ருன்; 'இவன் பொருமை கொள்கின்ருன்'' என்று கூறுவது சர்வ சாதாரணமாய் விட்டது. ஆதலால் நீ பா. தா. வின் மீது யாருக்கோ பொருமை பிறந்து விட்டதாகவும், பொருமை காரணத்தால் 'காப்பியடித்த வழக்கு' நடைபெற்றதாகவும் சந்தேகங் கொள்ளாதே. வழக்கின் நடவடிக்கைகள் உனக்கு ஆள் போல் எதிர் நின்று பா. தா. வைப்பற்றித் தெளிவாய் உரைக்கின்றனவே !

அன்:—உண்மை; எனினும் 'முஹம்மதுநபி' 'அபூபக்கர் சித்தீக்' என்னும் நூல்கட்குத் தானே ஆசிரியர் என்றன்றோ அவர் வாக்கு மூலத்தினின்றும் தெரியிவருகின்றது.

முன:—ஆசிரியர் என்ருல் இவைகளை ஆக்கியவர் என்றோ கருத்தேற்படுகின்றது ?

அன்:—ஆம்.

முன:—அப்படியாயின் பெகு முஹம்மது உஸைன் என்னும் ஓர் இரகஸிய மனிதன் ஆசிரியரா, அல்லது தா. இ. ஆசிரியரான பா. தா. இந்நூல்கட்கு ஆசிரியரா? என்னும் சந்தேகத்தை அவரது வாக்கு மூலமே நன்கு விளக்கிக் காண்பிக்க வில்லையா ?

அன்:—பெகு விலிருந்து அவரது நண்பர் ஒருவர் இவைகளின் கையெழுத்துப் பிரதிகளைக் கொடுத்ததாகவும், அவைகளைத் திருத்திப் புதிக்கி அச்சிட்டதாகவும் கூறப்படுகின்றது.

முன:—எனவே, இங்கு ஒரு திருத்தமும், அங்கு ஒரு திருத்தமும் ஒரு நூலில் ஒருவன் செய்து விடுவானுயின் அவன் அந்நூலுக்கு ஆசிரியனுவனோ ?

அன் :—ஆகான்.

முன:—அவ்வாறே இருக்கட்டும்; அதாவது கையெழுத்துப் பிரதிகளை ஓர் இரகஸிய மனிதன் கொடுத்ததாகவே இருக்கட்டும்; இந்நூல்கட்கு இவர் எவ்வாறு ஆசிரியராவர் ?

அன் :—உண்மை பெகு முஹம்மது உஸைன் தான் உண்மையில் இந்நூல்கட்கு ஆசிரியராதல் வேண்டும். அவ்வாறே இருக்கட்டும் என்றீரே, அதில் ஏதோ நுணுக்கம் இருப்பதாகத் தோன்றுகின்றதே.

முன : நுணுக்கம் என்ன ? முஹம்மது உஸைன் என்பவர் வழக்கு விவகார உலகத்தில் ஒருவரின் சிருஷ்டியாக இருக்கலாம் என்பதுதோற்றவில்லையா ?

அன் :—அது எப்படி ?

முன:—கேள். பிரதிவாதியின் வாக்கு மூலம்
இதோ உள்ளது; இதனை துருவி ஆராய்
வோம். இதனது 4-ம் பாராவில் இந்நூல்
களின் கையெழுத்துப் பிரதிகள் பெகு முஹம்
மது உஸைன் என்பவரிடமிருந்து பிரசுரக்
காரர் என்னும் தோரணையில் (ஆசிரியர் என்
னும் தோரணையில் அன்று என்பதைக் கவனி)
வாங்கப்பட்டதாகக் காணப்படுகின்றது.

இதன் எட்டாம் பாராவில் பிரதிவாதி விலை
யாகாப் புத்தகங்களை வாதிக்கு ஒப்புவித்து
விடுவதாகவும், இனி இந்நூல்களை அச்சிடு
வதில்லை என்பதாகவும் ஒப்புக்கொள்ளப்படு
கின்றது. மூன்ரும் பாராவில் இவைகட்குத்
தானே ஆசிரியர் என்று ஒப்புக்கொள்ளுகின்
ருர். பிரதிவாதி தானே ஆசிரியராம்! ஆனல்
கையெழுத்துப் பிரதிகள் வாங்கப்பெற்றன
வாம்!! என்ருலும் நூல்களை இனி அச்சிட்
விற்பனை புரியாமல் இருப்பதோடு, விலையா
காப்புத்தகங்களை வாதிகளான 'லாங்மென்ஸ்
க்ரீன்' கம்பெனியாரிடம் ஒப்புவித்து விடுகின்
ருராம் !!!

ஓ 'ஹே.' வாக்கு மூலம் போகும் போக்
கைக் கவனித்தாயா ?

அன் :—ஆம்! ஆம்!! தானே ஆசிரியராயின்
இடையில் இரகஸிய மனிதனுக்கு இடமேது
அப்படியிருப்பினும் லாங்மென்ஸ் கம்பெனி
யார்க்கு விலையாகாப் புத்தகங்களை ஒப்புவித்து
விடுவானேன் ? எல்லாம் தில்லுமல்லுகளா
இருப்பது போலன்றோ காணப்படுகின்றது

முன :—நீயே கவனி. பிரதிவாதி கூறு
வாக்குமூலத்தைப் பார்க்காமல், உமது சீ
திருத்தப் புலியாம் பிரசங்கச் சண்டமாரு
மான பிரதிவாதியின் வாக்குமூலமே உண்மை
இதுவாய் இருக்கலாம் என்பதைத் தெ
றெனத் தெரிவிக்கின்றதல்லவா ?

அன் :—இருந்தாலும், பெகு உஸைன் எ
பவரை என்னீர் 'ஓர் இரகஸிய' மனிதன் எ
கின்ருய் ?

முன :—அதைப்பற்றி நீயே யூகித்து
கொள்ளலாம்; இருந்தாலும் மிஸ்டர் 'மா
கட்டின்' குறுக்கு விசாரணையில், 1921-லி
ந்து பெகு உஸைன் என்பவர் உமது சீ
திருத்த ஆசிரியர்க்கு நண்பராம்; இவரு
குப் பல வியாசங்கள் வரைந்து அனுப்
இருக்கின்ருராம் ; இந்த நண்பருக்கும், விஷய
தானக் காரருக்கும், தொகையும் (கையெழுத்
துப் பிரதிகட்காக) கொடுக்கப் பெற்றதாம் ;
இவ்வாறெல்லாம் இருந்தும் நண்பர் ஊரே
உமது ஆசிரியருக்குத் தெரியாதாம் ! ஊன்
ப்பார் ! மேலும் இவர் பர்மா போகும்
போது சென்னையில் இறங்கி உமது ஆசிரிய
ரைப் பார்ப்பதுண்டாம் ; ஒருவரைக் கண்ட
தும் ஊர் யோக க்ஷேமங்களைக் கூட விசா
ப்ப தில்லையா ?

அன் :—ஆம் ! ஆம்!! இதுவும் ஓர் விந்தை
யாகத்தான் இருக்கின்றது.

முன :—அது போகட்டும்; நீதிபதியின்
தீர்ப்பைக் கவனி. 'அச்சுரிமை மீறப்பட்டுள்
ளது......ஒரு இரகஸியமான மனிதனிடமிரு
ந்து வாங்கப்பட்டதாகக் கூறப்படுகின்றது'
இரகஸியமான மனிதன் என்பது நீதிபதி
வாக்கியங்களாகும். இதன் பொருளை நீயே கண்டு
கொள். நிற்க ; விலைக்கு வாங்கப்பெற்றதாக
ஒரு 'டைரிப்' புத்தகத்திலிருந்து ஆதாரம்
காண்பிக்கின்ருர். இப்படிப் பதிவு செய்திருப்
பது மிக்க சந்தேகத்திற்கு இடமுள்ளதாய்
இருக்கின்றது என்கின்ருர் கனம் நீதிபதி.

அன் :—டைரிப் புத்தகத்தில் பதிவு செய்திருப்பதையா சந்தேகத்திற் கிடமாய் இருக்கின்றது என்கின்ருர் ?

முன : உன் கண்கள் குருடா ? நீ தான் படித்துப்பார்.

அன் :—அப்படியாயின் டைரியில் தப்புக் குறிப்புகள் எழுதக்கூடிய ஒரு அருவருக்கத் தக்க செயலுக்கன்றோ இவரைப் பாத்திரராக்குகின்றது ?

முன—: அது எனக்குத் தெரியாது. டைரிப் பதிவு சந்தேகத்திற் கிடமாயிருக்கின்றதாக நீதிபதி கூறுகின்ருர்.

அன் :—ஆமப்பா ; இதில் எனக்கு சந்தேகம் உளது என்ருல் நான் இதனை நம்பமாட்டேன் என்றும் நீயாகவே இதனை வலிய வரைந்து கொண்டிருக்கலாம் என்றுந்தானே அர்த்தமாகின்றது.

முன :— அர்த்தமும் அனர்த்தமும் செய்வதற்கு நான் சீர்திருத்தம் பேச எழுத முன் வரவில்லை. நாங்கள் எல்லோரும் உள்ளதை உள்ளவாறு அர்த்தம் செய்பவர்கள் நீதிபதி கூரியதற்கு அர்த்தம் நீ தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

அன் :—அந்தோ ! அந்தோ !!

---

## மார்க்கக் கல்வியின் மகிமையும், உலமாக்களது மேன்மையும்

அன்புற்ற நேயர்காள் ! "கல்விப்பயிற்சி
ஒவ்வொரு முஸ்லிமின்மீதும் கடமையாக்கப்
பட்டிருக்கின்ற'' தென நபிகள் திலகம்(ஸல்.)
அவர்கள் திருவாய்மலர்ந்தருளியிருக்கின்ருர்
. இக்காலத்திலோவெனின், துரதிர்ஷ்ட
மாக நம் முஸ்லிம் சகோதரர்கள் மேலான
, வரிசையுள்ளதும். விலைமதிக்கவொண்
த தாயுமுள்ள கல்வி கற்றல்' என்னும்
பாக்கியத்தை விட்டும் விலகி யிருக்கின்றனர்.
கல்வி' என்பது விலைமதிக்க வொண்ணுப்
பெரும் பாக்கியமென்பது கற்ருேர், கல்லா
ர் இருதரத்தார்க்கும் நன்கு தெரிந்த
தோர் உண்மையாகும். கல்வியானது மானிடன்
ன் எக்காலமும் இருக்கக்கூடிய பாக்கி
யமாகும். ஏனெனின் ஆண்டவனுல்
அளிக்கப்பெற்றுள்ள பாக்கியங்கள் அநேக நேரங்களில் இவனைவிட்டு நீங்கிவிடுகின்றன. கல்வி என்னும் பாக்கியமோ எக்காலும் நீங்குகின்றதில்லை. எப்போதும் தன்னுடனேயே இருக்கக்கூடிய இம்மாபெரும் பாக்கியத்தை நாம் புறம்போகவிட்டு வாளாயிருப்பதினும் துர்ப்பாக்கியம் வேறுளதோ ? இந்நிலைமையில் அதற்கு யாதொரு, பரிகாரமுந் தேடாதிருத்தல் அதனைப்பார்க்கினும் மடமையாகும். அந்தோ ! இதர சமுகத்தினர் கல்வியைக்கற்று நம்மனோரைப் பார்க்கினும் எத்துணைத்தூரம் மேம்பதவி யுற்றிருக்கின்றதென்பதை விளக்கிக்காட்டல் அவசியமின்று. அவர்கள் தினேதினே மேம்பதவியடைந்து செல்வதையும், நாம் க்ஷீணதிசையடைந்து

வருதலையும் கண்கூடாகக் காண்பதே இதற்குப் போதிய சான்றுபகரும். இதற்குக் காரணம், கல்விகற்றோர் முஸ்லிம்களிற் குறைந்தும் இதர சமூகத்தினரில் மிகுந்தும் நாம் பார்ப்பதுவுமேயாம். ஆனால் முஸ்லிம்கள் தங்களது முழுப்பிரயாசையுடன் கல்வி பயிலுவார்களாயின் இம்மையில் அன்னோர் முன்னேற்றமும், கீர்த்தியும் அடைவதோடு மறுமையிலும் நித்தியானந்தப் பேற்றைப் பெறும் பாக்கியசாலிகளாவர். "கல்வியானது மானிடனது மரணத்திற்குப் பின்னும் அவனை விட்டு நீங்கிவிடாத ஓர் பாக்கியம்'' என ஹஸ்ரத் அலீ (ரலி.) அவர்கள் கூறியமை இதன் அவசியத்தை எத்துணை வலியுறுத்துகின்றது பாருங்கள்! பிற மதஸ்தர்கள் கல்விகற்று மேம்பதவி யடைந்து வருவதைக் கண்ணுற்று வரும் முஸ்லிம்கள் உலகத்தில் யாதொரு மேம்பதவியை அடைந்ததாகவோ, மறுமையில் பிரயோசன மளிக்கத்தக்க கல்வியை கற்றுக்கொண்டதாகவோ தெரியவில்லை. இன்னோர் இம்மையில் நஷ்டமடைந்தவர்களா யிருப்பதோடு மறுமையிலும் அல்லல் தொல்லைகளுக்குள்ளாய் வருந்தும்படியான நிலைமையை எய்துகின்றனர்.

ஆண்டவனது திருவசனம், நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது திருவாக்கியம் இவைகளை மானிடன் கற்றுக்கொள்வதால் இகபரமிரண்டிலும் மேம்பதவியடைகின்றான். சங்கைக்குரிய ஸஹாபாக்கள் குர் ஆன், ஹதீது இவைகளைக் கற்றுக் கொண்டதன் பயனாக அரேபியாவின் அதிகாரமுழுதும் அவர்களது கை வசத்தில் இருந்தது. இது போழ்து நாம் கைநழுவ விட்டிருக்கும் குர்ஆன் ஷரீபின் கல்வி அவர்களுக் கிருந்தமையாற்றான் அரேபியா முழுவதையும் சிஷ்டபரிபாலனஞ் செய்பவர்களாகவும் கண்ணியவான்களாகவும், பிரக்யாதிபெற்று விளங்கினார்கள். திருமறைக் கட்டளையைச் சிரமேற்றாங்கி நடந்து வந்தது தான் அவர்களை மேம்பதவியுறச் செய்தது. "குர்ஆன் ஷரீபைக்கற்று அதனால் பிரதிபலன் அடைவதற்காகவேதான் அதை நாம் எளிதாக ஆக்கி இப்பூவுலகின்கண் இறக்கிவைத்தோம்'' என்னும் ஆண்டவனது வாக்கியம் காண்க. திரு குர்ஆனில் இகபர மிரண்டிலும் மானிடன் அடையவேண்டிய எண்ணிறந்த பிரயோசனங்க ளிருக்கின்றன. அவையாவன:— உலகத்தில் அரசன் அரசு செலுத்தவேண்டிய முறை, தலைமைத்தனம்புரியவேண்டிய ஒழுங்கு, யுத்தஞ் செய்யவேண்டியவிதம், பொதுஜனங்கள்பால் முஸ்லிம்கள் அனுஷ்டிக்க வேண்டிய சகோதர வாஞ்சை, இன்னம், இவைகள் போன்ற பல அரியவிஷயங்கள் குர்ஆன் ஷரீபில் அநேகவிடங்களில் தெளிவாக விளக்கிக் கூறப்பட்டிருக்கின்றன. முடிவாக, ஒவ்வொருவரும் உய்த்துணர்ந்து பார்ப்பாராயின் அவரவருக்கு இன்றியமையாத எல்லா வஸ்துக்களையும் அதில் காண்பர். கல்வியைக் கொண்டே இம்மை மறுமைக் குண்டாய பேற்றை. அடைய முடியும். . கல்வியற்றோன் ஆண்டவனையோ, மார்க்கத்தையோ, நலம் இடர் இன்னதென்பதையோ பகுத்தறிய சக்தியற்றவனாய் விடுகின்றான்.

கல்வியின் மேன்மை சம்பந்தமாயுள்ள குர்ஆன், ஹதீது இவைகளினின்று சிலவற்றை இதன்கீழ் குறிப்பிடுகின்றேன். அவைகளை நன்கு கவனிக்குமிடத்து கல்வியின் மேன்மையும் அதைக் கற்றோர்களின் உயர் பதவியும் தெற்றெனப் புலனாகும்.

"எவன் குர்ஆன், ஹதீது இவைகளின் கல்வி கொடுக்கப்பட்டானோ அவன் எல்லா நன்மைகளும் கிடைக்கப் பெற்றவன்போலாகின்றான்.'' அதாவது புவியில் ஒருவனுக்கு உயர் பதவியும் மறுமையில் கண்ணியமும் கிடைப்பதெல்லாம் குர் ஆன் ஹதீது இவைகளைக் கற்றுக்கொண்டதாற்றான் என்பதே.

"ஏ, நபியே! சொல்வீராக; கற்றோரும் கல்லாதாரும் சமமானவரன்று'' என ஆண்டவன் கூறியுள்ளான். இதனால் கற்றோர்களுக்கு மட்டிலடங்கா மேம்பதவிகளுள என்பதும், அவர்களுக்கு நிகர் எவருமிலர் என்பதும் புலனாகின்றது.

"ஈமான் கொண்டவர்களுடையவும், கல்வியைக் கொடுக்கப்பட்டவர்களுடையவும் பதவியை ஆண்டவன் உயர்த்துகின்றான்'' அதாவது கல்வி கற்றுக்கொண்ட முஸ்லிம்களை, இவ்வுலகில் கௌரவத்துடன் வைப்பதுமன்றி மறுமையிலும் அவர்களை மேம்பதவி பெறச் செய்கின்றான். ஆதலின் ஆண்டவன் ஓர்மைப்படுத்தி நமது நபிகள் திலகம் (ஸல்.) அவர்களுடைய நபித்துவத்தை ஒப்புக் கொள்வதுடன் கல்வி பயிலுவானாயின் இம் பதியிலும் மேன்மை பெறுகின்றான்.



"நாம் தாவூத் ஸுலைமான் (அலை.) இவ்விருவர்க்கும் கல்வியைக் கொடுத்தோம். அவ்விருவரும் அதைப்பெற்று "எங்களுக்கு மேம்பதவி யளித்த ஆண்டவனுக்கே புகழனைத்தும் உரித்தாகுக'' எனக் கூறினார்கள்.

எனவே கல்விக்கும் அதனைக் கற்றோர்க்கும் குர்ஆன் ஷரீபிற் கூறப்பட்டிருக்கும் அபூர்வ பதவிகளை உய்த்துணர்ந்து மார்க்கக் கலை பயின்ற ஆலி முக்களிக்கப்பட்டுள்ள உயர்பதவியையும், அவர்கள் பெரும் பாக்கியசாலிகளாகி விடுவதையும், கற்றோர்களது சன்னிதானஞ் சென்று வருவதாலுண்டாகும் அபரிமிதமான பலன்களையும் நண்பர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக.

"எவனை நல்லடியானகச் செய்ய ஆண்டவன் நாடுகின்றானோ அவனுக்கு மார்க்கக் கல்வியைக் கொடுத்து அவனை ஆலிமாகச் செய்து விடுகின்றான்'' என நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் நவின்றதாக ஹஸ்ரத் மஆவியா (ரலி.) அவர்களைத் தொட்டும் றிவாயத்துச் செய்யப்பட்டிருக்கின்றது.

ஏ, அபூதர்ரே! நீர், காலையிற் சென்று ஆண்டவன்றன் வேதத்திலுண்டாய ஓர் வாக்கியத்தைக் கற்றுக்கொள்ளல் நூறு 'ரகஅத்' தொழுகையை நிறை வேற்றுவதைக்காட்டினும் மிக மேலானதாகும்; ஓர் அத்தியாயத்தைக் கற்றுக்கொள்ளல் ஆயிரம் 'ரகஅத்' தொழுவதைக் காட்டினும் மேலானதாகுமென நாயகம் (ஸல்.) அவர்கள் கூறியிருக்கின்றார்கள். மானிடர்களுக்காக மறுமையில் நபிமார்களும் ஆலிம்களும் ஷுஹதாக்களும் ஆண்டவனிடத்தில் 'சிபாரிஸ்' செய்வார்களென நாயகம் (ஸல்.) அவர்கள் அருளியிருக்கின்றார்கள். படிப்பிற்கும் அதனைக் கற்றோர்க்கும் ஏற்பட்டுள்ள அளறற்ற பதவிகள் குர்ஆனிலும் ஹதீதிலும் விளக்கமாய்க் கூறப்பட்டிருத்தல் காண்க.

———

## இந்தியாவினது வறுமைத்தனம்

இந்தியாவை உலகிற்கே ஓர் கண்போன்ற நாடு எனக் கூறப்படுவதற்குக் காரணம் உலகத்தின் பல பாகங்களிலும் காணப்படும் சகல சௌகரியங்களையும் ஆண்டவன் இங்கு அமைத்து வைத்திருப்பதுவேயாம். உதாரணமாக உலகின் சில பாகங்கள் சதா கடுங்குளிர் உள்ளனவாயும், சில உஷ்ணமான காற்று வீசிக் கொண்டிருப்பனவாயும் இருக்கப் பார்க்கின்றோம். ஆனால் நம் இந்தியாவோ வெனின் 6 மாதம் இலேசான குளிர் அடிக்கக் கூடியதாயும், 6 மாதம் நடுத்தரமான வெயில் உடையதாயும், மிதமான சீதோஷ்ணத்தை உடையதாய் உள்ளது. இஃதன்றி பொருட்கள் விஷயமாயும் ஆராய்ந்து பார்க்குங்கால், பல்வகையான பொருள்களை உற்பத்தியாக்குவது கொண்டு ஆண்டவன் இப்பூமிக்கு சிறப்பை அளித்திருக்கின்றான். இத்தகைய சிறப்பைப் பெற்றிருந்தும் ஏனைய தேசங்களைப் பார்க்கினும் இஃது அடிமைத்தனத்தில் ஆழ்ந்து க்ஷீண தசை எய்தியிருப்பதன் காரணம் யாதென வினவப்படின் அஃது நாமே நம் கையால் தேடிக்கொண்ட மிடிமைத்தனம் என்றே பதில்கூற வேண்டியவர்களாயிருக்கின்றோம்.

முதலாவதாக இந்தியாவில் வசிப்போரிடம் முன்னேற்றமடைய வேண்டுமென்ற எண்ணம் அவர்களுடைய மனதில் சிறிதும் ஏற்படாததோடு முன்னேற்றத்தின் பக்கல் அவர்களது மனம் நோக்குவதும் அறவே கிடையாது. தாங்கள் முன்னேற்ற மடைதற்கு உபயோகிக்க வேண்டிய சக்தியை ஒரு கூண்டிலிட்டடைத்து வைத்துவிட்டு முன்னேற்றமடைய வேண்டுமென்பதை மறந்தே வாளாயிருக்கின்றனர். நாம் உலகின் கண்ணிலிருந்து யாது செய்யவேண்டும்? எவ்வகையான வேலையிலீடுபடுவது கொண்டு நாம் சுகத்தோடு காலங்கழிக்க முடியும்? என்பன இவர்களது அறிவில் உதித்தனவன்று. இவ்வாறு சிந்தித்துப்பாரா திருப்பதனால்தான் சரீரப் பிரயாசையின்றி எல்லாம்

ஆண்டவன்றன் கட்டளைக்கேற்ப நடைபெறுமென அவனது கிருபையின் மீதுமட்டும் நம்பிக்கை வைத்தவர்களாய் இருக்கின்றனர். இன்னோர் தக்தீர் (ஆண்டனது கற்பனை) இன்னதென அறிந்து கொள்ள வியலாதவர்களாய் வாய்மூடி, உட்கார்ந்திருக்கின்றனர். "மானிடன் முயற்சி செய்ததைத் தவிரவேறு யாதொன்றும் அவனுக்கு கிட்டாதென" ஆண்டவன் கூறியிருப்பதை அன்னோர் அறிந்து கொள்ளாமைக்குக் காரணம் யாதோ அறிகிலோம். ஆதலின் அவர்கள் தங்கள்மனதில் தோன்றுகின்றவற்றையே செய்யத்தலைப்படுகின்றனர். இதுதான் அவர்களின் வறுமைக்குக் காரணமாகின்றது.

உதாரணமாக:—கல்வி பயின்று தேர்ச்சி பெற்ற ஒருவன் ஏதேனும் ஒரு உத்தியோகத்தில் அமரவேண்டுமென நினைத்து அதனையே தன் சிந்தனையில் வைத்து வளர்த்து ஏதாவது ஓர் உத்தியோகத்தில் தான் அமர்ந்துவிட வேண்டும் என முயற்சிக்கின்றான். அன்னோன் ஒரு பள்ளிக்கூடத்திலோ மதரஸாவிலோ 40 அல்லது 50 ரூபாய் சம்பளம் பெற்றுக் கல்வி பயிற்றுவதில் ஆரம்பஞ்செய்து விடுகின்றான். ஆனால் அவன் இதைப் பார்க்கினும் வேறு மேல் உத்தியோகம் அடைய வேண்டுமென்பதை நாடுவதே கிடையாது. "இதுதான் தன் ('நஸீபு') விதியில் ஏற்பட்டது; முன்னேற்ற மடைதற்கு யாதொரு மார்க்கமும் கிடையா"தெனமனத்தில் திட்டப்படுத்திக் கொள்கின்றான். இதே காரணத்தாற்றான் அன்னவனுக்கு முன்னேற்றத்தின் சக்தி ஏற்படுவதே கிடையாது. தனக்குள்ளாகவே முன்னேற்ற மடைதற்குள்ள ஒரு சக்தியைஉண்பண்ணிக் கொண்டு பிறருக்கும் கற்பித்துக் கொடுக்கவேண்டுவதும், முன்னேற்ற மடைவதிலேயே அந்தச்சிந்தனையைச் செலுத்தி தான் உயர் சம்பளம்பெற தன்னாலியன்ற மட்டும் முயற்சித்து வருவதும் இவன் மீது கடமையாக்கப் பெற்றிருப்பதை சிறிதேனும் கவனிப்பதில்லை.

இன்னவன் முன்னேற்றமடைய நாடாதிருப்பதன் முடிவு கடைசியாக இவனுக்கு விவாகம் ஏற்பட்டு நாளுக்கு நாள் செலவு அதிகரித்து அதே 40 ரூபாய் சம்பளத்தைப்பெற்று தன்மனைவி, தாய், தந்தை இவர்களுக்கு சம்ரட்சணை செய்கின்றான். இவ்வாறாகவே சில காலங்கழிந்த பின் ஆண்டவன் இவனுக்கு மக்கட் பாக்கியத்தைக்கொடுத்து விடுகின்றான். இவனது வருமானத்தில் நாலு பேர் சம்ரட்சணை பெற்று வந்தது போக இது போழ்து அதிகம் 'பேர்களாகி விடுகின்றனர். இதனால் முன்னைவிட செலவு அதிகரித்து விடுகின்றது. ஆனால் ஏற்கெனவே கிடைத்துவந்த வரும்படி தான் இதுபோழ்தும் கிடைத்து வருகிறது. நாளுக்கு நாள் செலவதிகரித்தும் முன்னேற்றமடைதலைக் காணப்படாததாயும், வரும்படியும் அதே அளவில் வரக்கூடியதாயும் இருப்பதால் இந்நிலைமையில் கடன் வாங்கி சாப்பிட்டு அக்கடனின் காரணமாக கலங்கிய நெஞ்சினனாய் அல்லற்படுகின்றான். இவனைப் போன்றுதான் பெரும்பான்மையான இந்தியர்கள் தங்கள் காலத்தைக் கடத்தி வருகின்றனர்.

இரண்டாவதாக, கைத்தொழில், பயிர்த்தொழில் இத்துறைகளிலும் அவர்களின் வாழ்க்கை இதனை ஒட்டித்தான் இருக்கின்றது. அவர்களது வேளாண்மை சம்பந்தமாகவும் பெற்றோர்கள் அவர்களை எத்தகைய நிலையில் விட்டுச் சென்றார்களோ அந்நிலையிற்றான் இறுதிவரை இருந்து இறக்கின்றார்கள். இவ்விஷயமாக எவ்வாறு முயற்சி செய்தால் நாம் முன்னேற்றமடையலாம் என்பதிலும் வேளாண் தொழிலுக்கு எங்கெந்தக் காலத்தில் எவ் வெவ்வகையில் முயற்சி செய்ய வேண்டுமென்பதிலும் தம் கவனத்தை சற்றேனும் செலுத்துவதே கிடையாது.

மூன்றாவதாக, அவர்களது வியாபார சம்பந்தமாகவும் கவனிப்போமாயின் இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் வியாபாரத்தில் தங்கள் கவனத்தைச் செலுத்துவதே கிடையாது. நம் பெருமானார் (ஸல்.) அவர்கள் வியாபாரஞ்செய்து அதில் தக்க தேர்ச்சிபெற்றிருந்தார்களென்ற விடயம் அன்னோர் மனத்தில் பதிவதில்லை. ஆனால் (தாரீக்) சரித்திரங்களை ஆராய்ந்து பார்ப்பார்களாயின் இவ்வுண்மை எளிதிற் புலனாகும். சில சமயம் வியாபாரம் செய்வதின் நாட்டம் இவர்களது ஹிருதயத்தில் எழின், சொற்ப முதலைக்கொண்டு அதை ஆரம்பித்தல் இழிவெனக் கருதுகின்றனர். பெரும்பொருள் கொண்டுதான் வியாபாரஞ் செய்யவேண்டுமென்றெண்ணி வாளாயிருக்கின்றனர். அன்னோர் எதிர்பார்க்கின்றபடி அபரிமிதமான முதல் கிட்டப்போவதில்லை; அவர்கள் ஒருபோதும் வியாபாரஞ் செய்யப் போவதுமில்லை. இக்காலத்தில் மேனாட்டார்களிடம் முன்னேற்றம் எக்காரணத்தைப்பற்றியது எனக் கவனிப்போமாயின் அவர்கள் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பதுதான் என்பது நன்கு விளங்கக்கிடக்கின்றது. அவர்கள் சொற்ப தொகையைக் கொண்டும் அதற்கான வியாபாரஞ் செய்வதால் அதனைக் கேவலமாக நினைப்பதே கிடையாது. இதே காரணத்தால் தான் அவர்கள் பொருட் செல்வம் பெற்றவர்களாகவும், வறுமையினின்றும் ஒருவாறு விடுபட்டவர்களாகவும் திகழ்கின்றனர்.

'பொருளில்லார்க்கு இவ்வுலகமில்லை என்' றதற்கேற்ப, இவ்வுலகத்தில் நாம் தனிப்பட்ட வகையிலும், சமூக வகையிலும் முன்னேற்றம் அடைந்து வாழ வேண்டுமாயின், பொருட் செல்வம் முக்காலும் அவசியமாகும். சிறிய துரும்பு முதல் பெரிய தூண் வரையில்- இன்றியமையாத உணவுப்பொருட்கள் உடைப்பொருட்கள் முதல் மிகு சுகவாழ்க்கைக்குரிய மோட்டார் முதலிய வாகனங்கள் ஈறாக, எதனைத்தான் இக்காலத்தில் மனிதன் பொருளின்றிக் கொள்ளற்கு இயலும்? வலிச்சென்று சொல்லிக் கொடுத்ததும், வலிச்சென்று பாடம் கேட்டதுமான அக்காலம் அழிந்தே போய்விட்டது. கல்விப்பயிற்சி பெற வேண்டுமாயின் பொருள் வேண்டும்; ...தகப் பயிற்சி பெறவேண்டுமாயின் பொருள் வேண்டும்; சட்டப் பயிற்சி பெறவேண்டுமாயின் பொருள் வேண்டும். எப்பயிற்சியேயாயினும் ஆகுக, மக்கட்கு நலந்தரும் எல்லாமும் இக்காலத்தில் பொருளாற்றான் கிட்டுகின்றன. ஆதலின் பொருளுற்றாரே சுகமுற்றார்; பொருளற்றார் அச் சுகம் அற்றார் என்று எட்டுணையும் பின்வாங்காது கூறலாம். எனவே, நாம் முன்னேற்றம் அடைதற்கு வறுமை, இந்தியாவை விட்டு அவசியம் நீங்க வேண்டும். வறுமை நீங்கினாலன்றி நமக்கு எவ்வாற்றானும் பெருமை ஏற்படாது என்பது திண்ணம். ஆயின் வறுமையினால் உழலும் மாந்தர் இறைவனை இறைஞ்சுதல் புரிந்து கொண்டிருப்பார்கள்; செல்வம் படைத்தவர்கள் செருக்குற்று இருப்பார்கள் எனச் சிலர் கருதக்கூடும். உண்மை அவ்வாறன்று. வணக்கம் புரிதற்கும், செருக்கு படைத்திருத்தற்கும் மனமே ஆதாரமாய் இருப்பதனால், நல்ல மனதுடையவர்கள் வறியர்களினும் இருப்பர்; பணக்காரர்களினும் இருப்பர். கூர்ந்து பார்க்குங்கால் இடைவிடாது வறுமையில் உழல்பவன், அவன் தன் வறுமையை நீக்கிக் கொள்ளற்கே வழி தேடிக்கொண்டு இருப்பானேயன்றி, இறைவனைச் சிந்தித்து அவனைப் புகழவும் அவனுக்கு நன்றி பாராட்டவும் மன அமைதியற்றவனாய் இருப்பான். போதிய செல்வம் படைத்தவன் தனக்கு உலகப் போராட்டம் ஒருவாறாகக் குறைவுற்றமையின் மன அமைதி பெற்று எக்கணமும் ஆண்டவனுக்கு நன்றி செலுத்தும் பாவனையில் இருப்பான். இங்ஙனமன்றி வறுமையிலும் மன அமைதி படைத்து, செல்வத்திலும் செருக்குற்று இருக்கும் பான்மையினரும் உளர். ஆதலின் வறுமைதான் இறைவன் பக்திக்குச் சிறந்தது என்னும் கூற்றுப் பொய்ப்படுகின்றது. சிறுமையில் இருப்பினும், பெருமையில் இருப்பினும் உள்ளத் தூய்மை பெற்றவர்கள் இறைவனது சிந்தனையை எஞ்ஞான்றும் கைவிடார். நிற்க; வறுமை என்பது ஒரு பிணியே போன்றது. வறுமை மனத்தின் அமைதியைச் இலகுவில் கெடுத்து விடுகின்றது. வறுமை தன் பெற்றார் பெண்டிர் மக்கள் உற்றார் உறவினரோடு களிப்போடு காலங்கழிக்காது தடைபுரிகின்றது. வறுமை பிறருக்கு உதவி செய்யா நிலையில் நம்மை இருத்தி விடுகின்றது. எனவே, வறுமை என்பது கொடியதோர் நிலைமையேயாம். எக்கொடுமையிலும், சிறிது ஆறுதல் ஆண்டவனால் படைக்கப் பெற்றிருப்பதால், அவ்வாறுதலை நினைத்து கொடியதைக் கொடியதென்று கூறாது, இனியது என்றுரைப்பது அறிவிற்குப் பொருந்தாக் கூற்றாகும். ஆதலால் நாம் மேலே 'இயம்பியவாறு, நம் வறுமையை நீக்கிக்கொள்ள முயற்சி செய்தல் வேண்டும். தற்கால நாகரிகத்தில் தீயனவற்றை விலக்கிக்கொள்ளக் கூறுகின்றோமன்றி, அவசியமான முன்னேற்றத்திற்குத் துணையான சாதனங்களைக் 'கைவிடுமாறு நாம் என்றும் போதித்தோமன்று. மின்சார விளக்கை உபயோகித்து வரும் நாம் இக்காலத்தில் மின்சார விளக்குக் கூடாது என்று கூற முன்வருகின்றோமல்லோம். மார்க்கத் துறையில் மட்டும் மேனாட்டு நாகரிகத்தைக் கைக்கொள்ளாது, விவசாயம்,

வணிகம், கைத்தொழில் போன்ற துறை களில் நம் எண்ணம் மேனாட்டாரினும் விசா லித்துச் செல்லல் வேண்டும். அவர்கள் செல் வம் படைத்திருத்தலாற்றான் உலகத்தை ஆண்டு வருகின்றனர் என்றறிந்த நாம் அவர் கள் கையாடிய முறைகளின் நுட்பத்தை அறிந்துகொண்டு, அவர்களினும் பன்மடங்கு மேலாகத் திகழற்கு நாம் முயற்சித்தல் வேண்டும். எல்லாம் இறைவன் செயல் என்று சென்ற போக்கிலேயே நம் புத்தியைப்போக விட்டிருப் போமாயின், முயற்சியில் திளைத்து நிற்கும்மேனாட்டார் கடிதில் நம்மைச்சூனியர் காளக்கி விடுதல் முக்காலும் திண்ணம். ஆத லின் முயற்சி முக்காலும் வேண்டும்; தூய மனத்தோடு முயற்சி புரிவோமாயின் இறை வனின் இனிய துணை நம்மை ஈடேற்றி முன்னேற்றம் அடையுமாறு செய்யும். 'முயற்சி மெய் வருந்தக் கூலிதரும்' என் பதை நம் அன்பர்கள் மறவாது, மென்மே லும் தத்தம் வறுமையை நீக்கிக் கொண்டு செல்வத்துடன் திகழப்பாடுபடுவார்களாயின் ஒருங்கே நம் சமுகம் பொருட் செல்வம் படைத்ததோர் சமுகமாய், பிற சமுகங் களினும் வலிமையில்—வளப்பத்தில் சிறந் தாய்த் திகழும் என்பது திண்ணம்.

---




(சென்றமாதத் தொடர்.)

அல் முகத்திம்:—பிறரை உயர்ந்த பதவி களில் வைப்பவன். எனவே ஒருவன் அரசனு யினும், அமைச்சனுயினும் அவ்வரசும் அவ்வமைச்சும் ஆண்டவனல் கிடைத்த தென்றே ஏற்படுகின்றது. 'நான் மிகமிகப் பாடுபட்டேன்; தன் முயற்சி என்பதனு லன்றோ இத் தலைமைப் பதவியில் அமர்ந் துள்ளேன்; நீங்களும் முயற்சியுங்கள், என் போல் பாடுபடுங்கள்' என்று சிலர் ஏதோ தம் சிறிய முயற்சியினுற்றான் தலைமைப் பதவி கிட்டிவிட்டதாகக் கருதி நெஞ்சில் வீக்கம் கொள்கின்றனர். நம் முயற்சி எத்துணைப் பெரிதாய் இருப்பினும் அம் முயற்சியைச் செய்ய நல்லறிவு புகட்டியவனும், முயற்சி யால் பலன் விளையச் செய்தவனும் இறை வனே என்று கருதல் வேண்டும். இதனுல் தன்முயற்சி வேண்டாம் என்று கூறப்பட வில்லை. ஆயின் தன்முயற்சி எத்துணைச் சிறப் புடைத்ததாயினும் முயற்சி பலன்பெற்றமைக் குக் காரணன் இறைவனே யாகின்றான் என் பதை உணரவேண்டும் என்பதை இத் திரு நாமம் உணர்த்துகின்றது. மேலும் உயர்ந்த பதவியில் அமர்ந்து நிற்பதனுல் உண்டாகும் செருக்கை நீக்கி அவன் பெருமையை அறி வுறுத்துகின்றது. ஈதன்றி பிறர் உயர்ந்த பத வியில் இருப்பதைக்கண்டு அழுக்காறு அடை யாமலும், உயர்ந்த பதவியை விட்டுத் தாழ் தும் குறும்பான முயற்சியைக் கைக்கொள் ளாமலும் இருக்க பிறரைக் கட்டளை யிடுகின் றது. உய்த்துணர்க.

அல் முஅக்கிர்:— எளிமை யாக்குவோன் நம்மை பிறரினும் தாழ்மையாகச் செய்பவன் என்பது இதன் பொருள். எத்துணை அற் எளிய, கேவலம், தாழ்ந்த நிலைமையில் நாம் இருப்பினும் நாம் அதற்குக் கவலை கொள்ளு தலும், ஆண்டவன் நமக்குக்கொடியது செய் தான் என்று கருதலும் சாலாது. எல்லாம் அவன்செயலென்றும், இதுவும் நன்மைக்கே என்றும்பொருமையோடுஇருத்தல்வேண்டும் மேலும், பிறர் தாழ்ந்த நிலைமையில் இருப் தைப் பார்த்து ஏளனம் புரிதலும், அவர்களை அவர்கள் தாழ்வின் ஆதாரமாய்த் துன்புறுத் தலும் நற்செயல்களாகா. பிறரின் தாழ்பு ஆண்டவனின் அருளால் உண்டாயிருக்கின்ற தென்று கருதி, தாழ்ந்த பதவி குறித்து ஏள னம் செய்தலால் கூறிய தண்டனையே நேரும் என்பதையும்உயர்ந்த பதவிகளில் உள்ளோர் கவனித்தல் நன்று. மேலே குறிப்பிட்டுள்ள 'அல்முகத்திம்' என்பது எங்ஙனம் ஒருதிரு நாமமாய்இலங்குகின்றதோ, அங்ஙனமே 'அல் முவக்கிர்' என்பதும் விளங்குதலான்தலைமை ப்பதவியில் வைப்பனும் கடைசிப் பதவியில் இருத்துபவனும் அவனே யாகின்றான் என் பது உணரப்படுகின்றது.



அல்பதீஉ:—ஏற்கனவே ஒன்றும் இல்லாதி ருக்கும் போது அங்கு தன் எண்ணம்போல் பலவற்றைப்படைப்பவன். சாதனங்கள் இன் றிச் சாதிப்பவன் எனினும் பொருந்தும். ஒன்றைக் கொண்டு நூறாய்ப் பெருக்குதல் என்பது மனிதரின் இயல்பு. ஆயின் ஒன்றை யும் தான் 'படைத்தற்குத் துணைக்கருவியா கவோ மூலப் பொருளாகவோ கொள்ளாது படைக்க வல்ல ஆற்றல் ஆண்டவன் ஒருவ னுக்கே உரியதாகும். மேலே கூறிய பல குணச்சிறப்புகள் மக்களாலும் ஏற்று ஒழுகக் கூடியவையாயிருக்க, ஈண்டு இயம்பப் பெற்ற ஒரு தன்மை மக்கட்குக் கைவசமாவதின்று. எங்ஙனம் எங்கும் நிறைந்து நிற்கும் தன்மை இறைவனுக்கே உளதோ, அவ்வாறே ஒன்றை யின்றி ஒன்றைப் பலவற்றைப் படைத்தல் என்னும் தன்மையும் இறைவனுக்கே உளது எனக் கொள்க.

அல் காலிக் :—இத்திருநாமமும் இறைவ னின் படைக்கும் திறனைக் குறிப்பிடுகின்றது எனினும், ஏனைய பொருள்களைக் கூட்டியோ, குறைத்தோ, ஒன்றுபடுத்தியோ, வேறுபடுத் தியோ, மாறுபடுத்தியோ, வளர்த்தோ சிருஷ் டிப்பவன் என்னும் அரிய ஆற்றல்களை அடை சாற்றுகின்றது. இத்தன்மையும் மக்கட்குப் பொருந்துவதன்று. மக்கள் சிற்சில காரியங் களைக் கூட்டிக் குறைக்க வல்லாரெனினும் அதுதான்படைப்பு என்னும் பெருமையைக் கொள்ளாதென்க. மேலே கூறப்பெற்ற சில திருநாமங்கள் இறைவனின் அரிய பெருமை யைத்துலக்கமாகத் தெரிவிப்பதோடு, மக்கட் கும் அறிவுறுத்துவனவாய்த் திகழ்கின்றன. ஆயின் இதனைப் போன்ற சிற்சில திருநாமங் கள் இறைவனின் மாட்சி ஒன்றையே விளக் கிக் காட்டுவனவாம். இப்பண்பினுல் மக்கள் தம் எளிமையை நன்குணர்ந்து கொண்டு மென்மேலும் அவன் பக்திப் பெருக்கில் திளைப்பர் என்பது பயனும் என்றுணர்க.

அல் பாக்கீ :— எல்லாப் பொருள்களினும் நீண்ட ஆயுள் படைத்தவன், பிற பொருள் களை உள்ள வகையில் வைத்துக் காப்பவன். இத் திருநாமம் இறைவனின் அழியாத் தன் மையையும் படைப்பில் ஸ்திதி என்னும் அவ னது ஆற்றலையும் உணர்த்துகின்றது. நீண்ட ஆயுள் என்ற அளவில், இறைவன் என்றும் உள்ளான் என்னும் அவனது அழியாத் தன் மையினைக் குறிப்பிடுகின்றதே யன்றி, குறு கிய ஆயுள் என்பதற்கு எதிர்மறையான நீண்டஆயுள் என்று ஈண்டு குறிப்பிடப் பெற வில்லைஎன்பதை அன்பர்கள் அறிவார்களாக. ஆயுள் என்பது காலத்தைக் குறிப்பிடுகின்ற வாற்றால், காலம் என்னும் ஓர் அளவிற்கு இறைவன் மட்டுப்படுகின்றனுதலின், நீண்ட ஆயுள் என்னும் பதம் மக்கள் வழங்கும் அதிகக் காலம் என்னும் கருத்தைத் தருவதன்று ; ஆயுள் என்னும் அளவைக் கடந்து அழியாத் தன்மை பொருந்திய ஓர் விசேடத்தையே இஃது உணர்த்துகின்றது. நிற்க, எப்பொருளும் ஒவ்வோர் நிலையில் நின்றே செல்லல் அவசியமாயிருத்தலின், அல்லது, ஒரு பொருள் அதற்கென்று உண் டாயதன்மைகளோடு இருத்தல் அவசியமாய் இருத்தலின் அல்லது ஒரு பொருளை அதற் குரியபெயரோடு அழைத்தற்கு அழைக்கப் படும்பொருளின்காரணவிசேட, இடுகுறிப்பெ யர்கட்கு ஏற்ற தன்மைகள் அப்பொருளிடத் தே காணப்பட வேண்டியது அவசியமாய் இருத்தலின், இதற்குரிய ஸ்திதியை விளைப் பவன் இறைவன் என்றும் இத் திருநாமம் எடுத்துக் காண்பிக்கின்றது. உதாரணமாக பூமியைப் பூமிக்குரிய தன்மைகளோடும், மனிதனை மனிதனுக்குரிய உருவம் முதலிய தன்மைகளோடும், மாக்களை மரங்களை புல் பூண்டுகள் முதலியனவற்றை அவையவைக் குரிய தன்மைகளோடும் விளங்க வைத்துக் கொண்டிருப்பதும் இறைவன் செயலாதலின், இறைவனுக்கு அல் - பாக்கி (ஸ்திதி கர்த்தா) என்னும் திருநாமம் வழங்கப் பெறுதல் எத் துணை இயற்புடையுதாய் உள்ளதுபாருங்கள். இத் திருநாமத்திற்குரிய ஆற்றலின் இயக்கம் இவ்வுலகில் இல்லையேல், நாம் கண்ணால் கா ணும் பல பொருள்களும் காணப்படா பல வும் இப்போழ்துள்ள நிலையில் இரா; எல்லாம் ஒன்றாய்க் குழம்பியே காணப்படும். ஒன் றைப் படைத்து, அப்படைப்பின் விசேட லட்சணங்களை அதன் ஆயுள்வரையில் அழிய வொட்டாது பாதுகாத்தலும் இறைவன் செயலாகின்றது. மக்கள் மரணகாலம் வரை யில் மக்களாய்ப் இருப்பதும், மற்றும் பல பொருள்கள் எல்லாம் அவை அழிந்துபோம்

வரையில் அவைகட்குரிய லட்சணங்களோடு
இருத்தலும் இறைவனது அளவிட முடியா
ஆற்றலினுற்றுன் என்பது வெள்ளிடை மலே.
இவ் அவசியமானதும் உலகம் தழைக்க இன்றி
யமையாததுமான இவ் வாற்றலை ஆண்டவன்
கைக்கொண்டு ஒழுகதலாற்றுன் நாம் உயிர்
வாழ்ந்துகொண் டிருக்கின்றோம். இதுபற்றி
நாம் இறைவனுக்கு யாது கைம்மாறு புரிய
வல்லோம்? அன்பர்கள் சிந்திப்பார்களாக.

அல்முமீத் :— அழிப்பவன். படைப்பவ
னும் அவனே; படைத்து பொருள்களைப்
படைக்கப்பெற்றவண்ணம் பாதுகாப்பவனும்
அவனே; பிறகு அழிப்பவனும் அவனே.
இப்பதம் நாசப்படுத்துகின்றவன் என்னும்
பொருளை நல்குகின்றது. நாசமாக வேண்
டிய பொருள்கள் அழியவேண்டியது அவசிய
மாய் இருத்தலின், உலகுக்குத் தீயனவாயும்
அவசியமில்லாதனவாயும் உள்ள பொருள்கள்
அழிவுறுதல் அறிவிற்கும் உலகச் செழுமைக்
கும் இன்றியமையாதிருத்தலின், அல் முமீத்
என்னும் சிறப்புடைய திருநாமத்திற்கு இறை
வன் இலக்காதல் காண்க. மேலும், ஒருவன்
தன் அகச் செருக்கால் தனக்குக் கடிதில் மர
ணம் நேராது என்று கருதிக் கொண்டோ
அல்லது மரணம் என்பதனை அறவே மறந்
தோ இருப்பவனை இறக்குமாறு செய்து,
பிறர்க்கு அறிவூட்டுதலும், மரணத்தைப்
பற்றி நினைவூட்டுதலும் ஆண்டவனின் திருச்
செயல்களாம். பிறப்பு எத்துணை உலக
வளர்ச்சிக்கு அவசியமாய் இருக்கின்றதோ,
அஃதே போற்றுன் இறப்பும். பிறப்பை
அளிக்கும் இறைவன், அஃதாவது படைத்
தல் என்னும் பண்பைக் கொண்ட இறை
வன் இறப்பு என்பதனை அளித்து அழித்
தல் என்னும் சிறந்த குணத்திற்கு இலக்
காகின்றுன்.

அல் வாஜித் :—எல்லாம் அறிந்தவன். இவ்
வுலகில் உள்ள எல்லாப் பொருள்களையும்
தானிருக்கும் இடத்திருந்தே கண்டு கொள்
ளக் கூடிய திறமை வாய்ந்தவன். மறைதல்
என்னும் தந்திரத்தைப் பிறர் கையாள அத
னல் ஏமாற்றமுருதவன் எனினும் பொருந்
தும். சிலர் ஒரு சில குற்றங்களைப் புரிந்து
விட்டு சமுகத்தினின்றோ, அரசாங்கத்தி
னின்றோ தப்பி ஓடி மறைவிடம் புகுந்து
கொள்ளுகின்றார்கள். ஆயின் ஆண்டவனின்
கட்டளைகளை மீறி அவர்கள் எங்கு ஒளிப்
பினும் அங்கும் இறைவனின் நாட்டம்
செல்ல அவர்களின்மறைவிடம் இறைவனுக்கு
வெள்ளிடை மலேபோலாகின்றது. ஆதலின்
ஒரு தீமையை இழைத்துப் பின்னர் ஆண்ட
வன் சந்நிதி விட்டகன்று ஓடி ஒளிந்துக்
கொள்ளலாம் என்னும் நினைவை எல்லோரும்
அகற்றி நிற்றல் நன்று. மறைதல் என்பது
மக்கள்பால் ஒரு அளவிற் செல்லும். ஆயின்
இஃது ஆண்டவன்பால் ஈடேருதாதலின்
என்றும் ஆண்டவன் திருமுன் இருப்பதாகக்
கருதி நாம் அவனது கட்டளைகளை நிறை
வேற்றி அவனுக்கு நல்லவர்களாதல் வேண்
டும். நாம் நம் தாய் தந்தையர் முன்னிலை
யில் ஒரு தீமையைச் செய்தற்கு நம் இளம்
வயதில் அஞ்சி யிருப்போம். ஆயின் தாய்
தந்தையர் இல்லா இடங்களில் அதே தீமை
யைக் ஒரேவொருக்கால் புரிந்து இருத்
தலும் கூடும். தாய் தந்தையர் கண் முன்
எஞ்ஞான்றும் நாம் இருக்கின்றோமல்லோம்.
ஆயின் இறைவனின் திருநாட்டத்தின் முன்
நாம் ஒவ்வோர் கணமும், தினமும், திங்களும்
ஆண்டும் இடைவிடாது நடமாடிக்கொண்
டிருக்கின்றோம். இவ்வொரு உண்மையை
மனம் பதிய நாம் உணர்ந்து கொள்வோமா
யின், நம் ஒழுக்கத்தில் எட்டுணையும் இழுக்கு
நிகழாது. சதாகாலமும் தன் எஜமானன்
பார்வையில் உள்ள ஊழியன் ஒருவன் எவ்
வாறு தன் வேலைகளை ஒழுங்காய்ச் செய்து
கொண்டு வருவானே, அவ்வாறே நாமும்
இறைவனின் இத்தன்மை(எல்லாம் அறிதல்)
யை உணர்ந்துகொள்வோமாயின் நம் வாழ்க்
கையைக் கள்ளமில்லாமல்கழித்துவருவோம்.
அந்தோ! பிறர் மெச்சுதற்குப் பால் குடிப்
பவர்கள் போன்று இவ்வுலகிற் பலர் மக்கள்
புகழ்ச்சி கருதியே நல்லார்கள் போன்று
நடிக்கின்றார்கள். அகத்தே கறுத்துத் திரி
யும் இவர்களை இறைவன் சதாகாலமும் கண்
ணோக்குகின்றுன் என்பதை இவர்கள் உய்த்
துணர்வரேல், என்றும்—எக்கணத்தும் இனி
யாராய் இருக்கப்பாடுபடுவர். இறைவன்
இவர்களது முயற்சியை அறிந்து இனியது
புரிவான்.

நிற்க; இறைவனது பெருமையை உணர்த்
தும் திருநாமங்கள் அனைத்தையும் எடுத்
விரித்துரை செய்யும் ஆற்றலை இவ்வெளியேன்
உடையவனல்லேன். ஒரு திருப்பெயர்க்கே
இவ்வுலகம் உள்ள அளவும் பொருள் கூறல்
சாலாது; அத்துணை விழுப்பமும் பொருட்
செறிவும் மாட்சிமையுந் தங்கிய அவனது
திருநாமங்களிற் சிலவற்றை மிகவும் சுருங்
கவே ஈண்டு எடுத்துக் கூறியுள்ளேன். அன்
பர்கள் அவரவர்கள் அறிவைக் கொண்டு சிந்
தித்து, உணர்ந்து, நன்மை பெறுமாறு எல்
லோரையும் நேரான பாதையில் செலுத்தும்
திருக்கருணையை உடைய அர் ரஷீத் அருள்
புரியுமாறு பிரார்த்திக்கின்றேன்.

---



## சுகாதாரம்-உடல்நிலை.

கடந்த வெளியீட்டில் சுகாதார வாழ்க்
கைக்கு அடிப்படை மனத்தின் தூயநிலை
என்றும் இயம்பினோம். உடலை எத்துணைத்
தூய்மைபெறக் கழுவிக் குளிப்பாட்டி நல்
லுணவுகளாலும் நல்லாடைகளாலும் பாது
காப்பினும், மனம் செம்மையாய் இருந்தாற்
றன் சுகாதாரம் நிலைக்கும் என்பதை மீண்
டும் வலியுறுத்தி உடல்நிலையைப் பற்றி
மேலே கூறுவாம்.

இவ்வுடல் நிலைத்து நிற்பதற்கு ஸ்தூலமாய்
உள்ள காரணம் காற்றாகும். காற்றால் மூச்சு
இயங்குகின்றது. மூச்சின்றி இவ் வுலகில்
பேச்சு வேறில்லை. எனவே இவ் வுயிர்க்கு
ஆதாரமாய காற்று எத்தனைக்கு எத்துணை
தூய்மையானதாய் உட்கொள்ளப் படுகின்ற
தோ அத்துணைக் கத்துணை சுகாதார
மும் ஒரு மனிதனுக்கு நிலைத்து நிற்கும் என்
பது வெளிப்படை. உணவின்றி ஒரு மனிதன்
ஒரு மாதங்கூட உயிருடன் இருத்தல் கூடும்;
நீரின்றி ஒரு வாரங்கூட உயிர் வாழ்தற்கு
இயலும்; ஆயின் காற்றின்றி ஒரு கணப்
பொழுதேனும் இவ்வுலகச் சீவராசிகள் உயி
ருடன் இருத்தல் இயலாதாம். எனவே,
நோயற்ற வாழ்க்கையைக் கைக்கொள்ளக்
கருதும் ஒருவன் சுத்தமான காற்றையே
சுவாசிக்கும் சாதனங்களைத் தேடிக் கொள்
ளல் வேண்டும்; அக் காற்றையும் சுவாசப்
பை நிரம்ப உட்கொள்ளல் வேண்டும். நல்ல
காற்றையே எஞ்ஞான்றும் சுவாசிக்க முயற்
சித்தலோடு, அவ்வாறு உட்கொள்ளும் காற்
றைப் பூரணமாய் ஏற்றுக்கொள்ளவும் பழகி
வருதல்வேண்டும். சிலர்தம் காற்றை சுவாசப்
பைகள் பூரணமாய் நிறையுமாறு உட்கொள்
ளாமல் அரை குறையாகச் சுவாசிக்கின்றனர்.
இத்தகையினரின் சுகாதாரக் கேடானசெயல்
எளிதில் அவரவர்களால் உணரக் கூடாத
வாறு இருப்பதால், இக் குற்றம் பரவி இரு
ந்து வருகின்றது. தனித்த ஓரிடத்தில் உட்
கார்ந்து முதன் முதலில் ஏற்கெனவே உள்ள
காற்றை தம்மால் இயன்ற அளவில் வெளிப்
படுத்தி, பின்னர் இயன்ற அளவும் (அதாவது
இனி மேற்கொண்ட அளவில் காற்றை
சுவாசிக்க இயலாது என்னும் உணர்வு பிறக்
கும் அளவும்) சுவாசத்தை இழுத்துப் பார்ப்
பார்களாயின், தங்களுக்குள்ள சுவாசப்பை,
நிரம்புவதற்குரிய காற்றை இதுகாறும் சுவா
சித்துப் பழகாத ஒரு தவறு தமக்கு இருந்
தமை தெற்றெனத் தோற்றும். காற்றைக்
குறைபடச் சுவாசிப்பதனுல் சுவாசப் பை
களில் உள்ள குழாய்கள் நாளடைவில் (பழ
காத் தன்மையால்) சுருக்கம் எய்துகின்றன.
சுருங்கிய நுண்ணிய அச் சுவாசக் குழாய்கள்
பின்னர் அழிவுற்றுப் போகின்றன. இதனுல்
உடலுக்கு வலிமையின்மையும், காசம் போ
ன்ற நோய்களும் விளைகின்றன. ஆதலாற்றுன்
காற்றைச் சுத்தமானதாய்ப் பருகவேண்டும்
என்பதும், அப்படிப் பருகுபவர்களும் பூரண
மாய்ப் பருகவேண்டும் என்பதும் அவசிய
மாயிற்று.

காற்றில் உள்ள பிராண வாயுவாற்றுன்
நமது இரத்தம் செந்நிறமுள்ளதாய்க் காணப்
படுகின்றது. இப் பிராண வாயுவால் சுத்தப்
படுத்தப் பெருத இரத்தந்தான் சிறிது
கருத்து நீல நிறத்தோடும் கூடி ஓடுகின்றது.
இக்கருநீல இரத்தமும் சிறிது நேரத்தில் மீண்
டும் பிராணவாயுவால் சுத்தப்படுத்தப்பெற்று
செந்நிற இரத்தமாகின்றது. செந்நிற இரத்த
மானது போக எஞ்சி நின்ற விஷம் சிறுநீராக
வும், வியர்வையாகவும், மற்றுமுள்ள பல்
வகை மலங்களாகவும் வெளிப்படுகின்றது.
நமது உடலில் உள்ள விஷம் நீங்குவதற்குக்
காற்றே ஆதாரமாக இருத்தல் கண்கூடா

தலின் தூய்மையான காற்றை உட்கொள்ளற்கு பட்டினங்களில் வசிக்கும் ஒவ்வொருவரும் நாடோறும் கடற்கரைக்குச் செல்லல் நலமாம். கடற்காற்றில் ‘ஓசோன்’ (OZONE) என்னும் இரட்டிப்புத் தன்மை கொண்ட பிராணவாயு இருக்கின்றது, அதனால் சுவாசப்பை, இருதயம் இவைகள் சுத்தப்படுகின்றன. இரத்தமும் குழாய்கள் வழியாய் தாராளமாய்ச் செல்லுகின்றது. இதன் பயனாய் மூளைக்குத் தீவிரமும், மனதிற்கு உற்சாகமும் விளைகின்றன. ஆயினும் ஏற்கெவே க்ஷயம், காசம் முதலிய சுவாச நோயுள்ளவர்கள் கடற்கரைக்குச் செல்லாதிருத்தல் வேண்டும். இக்காற்றில் உப்பும் சேர்ந்திருப்பதால், உப்பானது நீரைப் பெருக்கி மென்மேலும் நோயையும் அதிகரிகச் செய்யும். இத்தகையோர் சதுப்பு நிலங்கள் இல்லாத கிராமங்கள் சென்று வசித்து வருதல் வேண்டும்.

காற்றில் கடற்காற்று நன்று; அதனினும் நன்று கிராமவெளிகளில் உண்டாகுங் காற்று; அதனினும் நன்று மலைக்காற்று. அவரவர்கள் தங்கள் தங்கள் உடல் நிலையை அறிந்து இவைகளில் தமக்கு உசிதமான காற்று யாதெனத் தேர்ந்து அதன்படி நடந்துகொள்ளல் வேண்டும். நல்ல காற்றைத் தாராளமாய் தங்கள் தங்கள் இல்லங்களில் உலவவிடாது, சென்னல்களை அடைத்து வைப்பவர்கள் பல வகையான ஜுரங்கள், கக்குவான் (குழந்தை கட்கு), வயிற்றுப்புடை முதலிய நோய்களால் இடர்ப்படுதற்கு இலக்காதலோடு, உடற் கட்டிலும் குன்றிவிடுகின்றனர். சிலர் குளிர் காலங்களில் எல்லாச் சென்னல்களையும் இறுக அடைத்துவிட்டுத் தூங்குகின்றனர்; பலர் ஒன்றுகூடிப் படுக்கின்றனர். இப்பழக்கம் மிகக் கொடியதாகும். சென்னல்கள் நற்காற்றுப் புகும் வண்ணமும் துர்க்காற்று புறமேகும் வண்ணமும் திறந்தவாறு இருத்தல் இன்றியமையாததாகும். போர்வை கொண்டு உடலை மட்டும் பொத்திக் கொண்டு சென்னல்களைத் திறந்து வைத்து உறங்குதல் சாலவும் சிறந்ததாகும். பலர்கூடி ஒரு அறையில் நித்திரைபுரிதலும் தீய பழக்கமாகும். பிறரின் கரிமல வாயுவை உட்கொண்டு பின்னர் வைத்தியர்களைத் தேடித் திரிந்து துயரடையாமல் இருத்தற்குக் காற்றினும் சிறந்த ஒரு காப்பு இல்லை. நற்காற்றை உடல்படும் வண்ண மும், சுவாசக் குழாய்கள் நிரம்பும் வண்ண மும் கையாளும் ஒருவன் எளிதில் பிணி யென் னும் பேய் வசம் சிக்குப்படான். ம றொன்று; நீங்கள் வாயைத் திறந்துகொண் வாயின் வழியாகக் காற்றை உட்கொள்ள தீர்கள். மூக்கு நமக்கு எதுபற்றி உள்ள என்பதையும், காற்றை வடிகட்டி உ செலுத்த மூக்கில் ரோமங்கள் உளவெ பதையும் அறியாது காற்றை வாய் வழி யாய்ச் சுவாசிப்பவர்கள் தாங்கள் உ ணும் உணவையும் வேறு வழிகளால் உ கொள்ளுபவர்களை ஒத்து நோய்க்கு இல காவர். தூங்கும்போழ்தும் காற்றை மூக்கி வழியாகவே சுவாசிக்கப் பழகுதல் வேண் டும். சிலர் நித்திரைக் காலத்தில் வாயை திறந்தவண்ணமே சயனிக்கின்றனர். இ மிகத் தவறாகும். இஃது பிறருக்குப் பிரேத தைக் கண்ணுற்றதைப் போன்ற ஒரு உண சியை விளைவிப்பதோடு, சுகாதாரத்திற்கு முற்றிலும் முரணான கொடிய பழக்கமாகி றது. அவ்வாறு வாயைத் திறந்த வண்ண தூங்கும் துர்ப்பழக்கமுடையவர்கள் படுக்க போகும் முன்பு மூக்கில் தடையில்லாம சுத்தம் செய்து கொள்ளல் வேண்டும்; சா ரணக் காலங்களிலும் வாயை மூடிப் ப வருதல் வேண்டும். உறங்கப் போகுங்க வாய் மூடியே உறங்க வேண்டும் என் எண்ணத்தை மனத்தில் பதிய வைத் கொள்ளல் வேண்டும். அன்பர்கள் கவன பார்களாக.



# பத்திரிகைகளின் பெரும்பயன்

சமுதாய, தேசீய சரித்திர ஞானம் டைத்த நேயர்கள் இத்தரணியில் மானுஷ்ய ர்க்கத்தின் வழக்காசாரம் தோன்றிய லந்தொட்டு இற்றைய நாள்வரை (1) சரீர க்தி (2) நீராவிச் சக்தி (3) மின்சாரசக்தி கிய முச்சக்திகள் பற்பல உலகக் காரியாதி களை சாதித்துப் பயனுறுவதில் பெருஞ் சாதனங்களாயிருந்து வருகின்றன வென் பதை நன்குணர்வர்.

## சரீரசக்தியின் பயன்

இயற்கைக் கற்பனைப்படி சரீர சக்தியானது னைய சக்திகளைக்காட்டினும் முதன்மைப் பற்றிருப்பது வெளிப்படை. சரீரசக்தியா து உண்மையில் மானிட நாகரிக வாழ்க்கையின் இளமை எனினும் ஒக்கும். இதுகாலை கற்பசாஸ்திரிகளும், புராதனச் சின்ன ராய்ச்சியாளரும் கண்டுபிடித்து உலகினர் ன் வெளிப்படுத்தும் புராதனக்கால சாத ங்களை நோக்குமிடத்து அப்புராதனக்கால க்களின் சரீரசக்திகளின் அரும்பெருந் ன்மை நன்கு விளக்கமாகின்றது.

புராதனக் காலத்து வெற்றியாளர்கள் பிற டொன்றை நோக்கிச் செல்லுங்கால் மது வீரதீர பராக்கிரம சரீரசக்தியைக் காண்டேதான், பற்பலகாரியாதிகளைசெய்து ட்டி உலகின் கண் வெற்றிக் கொடி நாட் க் கீர்த்தி அடைந்தனர். இத்தகைய உலக ரேஷ்டவீரர்கள் சேனாபலத்தாலும், ஆயுத லத்தாலும் ஜெயம் பெற்றனரென்பது ஒப்ப டிந்த விஷயம். சேனையை நடாத்தி ஆயு ங்களை உபயோகிப்பதென்பது சர்வசாதார மாய் யாவராலும் எளிதில் செய்து முடிக் கரிதாம். தேகவன்மையும் உருப்புகளில் னும் இரத்த வேகமுமுள்ளவர்கள் தாம் சனயுதசாதனத்தில் பயனும் நலனும் பற்றுக்கொள்ளல் சாலும், உதாஹரண க இருப்புக் கவசம் பூண்டு வாள் வீச ற்றலில்லாதோர் அக் காலத்துப் போர் ளில் முனைதல் என்பது மடமையாகும். திரை சவாரி செய்யத் தெரியாதார் குதிரைப் படையில் ஒருவராய்த் திகழ்தலும் எங்ஙனம்?

முடிவாய்க் கூறுமிடத்து, ஒருசமூகம் ஜெயம் பெறவேண்டுமாயின், அல்லது ஒருதேசம் சுயாட்சி பெறவேண்டுமாயின், அல்லது ஒரு மனிதன் கோரியகாரியம் ஈடேறவேண்டுமாயின், இறைவனருளப்பெற்ற சரீர சக்தியையும், அங்கப் பிரயாசையையும் பிரயோகித்தே இன்னவர் ஜெயசீலராதல் வேண்டும். அங்கப் பிரயாசையும் தேகசக்தியு மில்லாது வெறும் கூரிய புத்தித் தந்திரத்தை மட்டும் உபயோகிப்பதினால் பூரண வெற்றிக்கிடைக்காது என்பது திண்ணம்.

பண்டைப்போது புக்தெநஸர் (நபுகாத் நேசார்) என்னும் பெயர் படைத்த பாபர் மகா சக்ரவர்த்தி எகிப்து ஸிரியா நாட்டின்மீது படை யெடுத்துச் சென்றக்கால் இன்னோர் சோம்பற் கொள்ளாது தாமே கவசமும், வாளும், கேடயமும் பூண்டு பரிவாகன வீரராய் சேனையின் முன்னணியில் நின்று வெற்றிப்போர் புரிந்துள்ளனர். தற்காலத்து தந்திர உபாய வீரர்களைப் போல் அன்னோர் மோசத்தைக் கொண்டு பிறரை ஏமாற்றி வெற்றி பெற்றோர்களல்லர்.

மக்தூனியா மகா அரசராகிய ஸர்தார் இஸ்கந்தர் என்பார் கிரேக்க இஸ்பெயின் காரரின் சகாய பலத்தைக்கொண்டு இந்தியாவின் பண்டை அதிபராயிருந்த போரஸ் மீது படையெடுத்தபோது இன்னவரே முன்னணி வீரராய் நின்று தம் சரீரப் பலத்தைக்கொண்டு முயன்றே ஜெயசீலரானார். இன்னவரின் வீரதீரம் பராக்கிரமத்தை மெச்சியே தான் இந்தியரும் இன்னவரை, ‘வீரச் சிரேஷ்டரென’ ஏற்றுக் கொண்டனர்.

## ஆவியும் புகையும்

மனிதசமூகம் இளமைப் பிராயத்தைக் கடந்து மேற்செல்லுங்கால் நாடும், சமூகமும் முன்னேற்ற மடைதற்கு கையாளப் படும் இரண்டாவது சக்தி புத்தி சூக்ஷமத்தையொட்டியதாகும். எனவே கற்கோட்டை

யையும், உறுதியான விடுதியையும் உடைத்தெறிந்து வெற்றிப்பெற பீரங்கித் தோட்டா மருந்து வெடிகள் உபயோகிக்கப் படலாயின.

சீன தேசத்தார் வேடிக்கை விளையாட்டுக்கெனக் கண்டுபிடித்த வாண வெடிமருந்துகள் பின்னர் துப்பாக்கி, பீரங்கி முதலியவற்றிற்குரிய சாதனமாய் விளங்கின. எனவே ஸல்ஜூக் வம்ச அரசர் ஏஷியா கோசக் மீது இப்புகை ஆவிப்பலத்தினால் வெற்றி யடைந்தார். இவ்வாறே கான்ஸ்டாண்டி நோபிளின் அரசர் சுல்தான் முஹம்மத் பாதிஹ அவர்கள் உறுதியான பீரங்கிபலத்தைக்கொண்டே கிறிஸ்துவக் கோஷ்டியினரின் கோட்டைக்கொத்தளங்களை தகர்த்துத் தரைமட்டமாக்கிக் ஜெய சீலரானார். துருக்கிய வீரர்கள் பிரயோகித்த துப்பாக்கி பீரங்கி வெடிகுண்டுகளின் வன்மையானது கிறிஸ்துவக் கோட்பாடெனும் ஆழ்ந்த மயக்கத்துள் தூங்கிக் கொண்டிருந்த ஐரோப்பியர்களைத் தட்டி யெழுப்பிவிட்டது. இங்ஙனம் துருக்கியரால் தட்டி யெழுப்பப்பெற்ற ஐரோப்பியர் அதுமுற்றுன் நாகரிகத்திலும், முன்னேற்றத்திலும் தலையிட்டுப் பயன் பெற்று இதுகாலை நம் கீழ்நாட்டாரை ஆளக் கூடியவர்களா யிருந்து வருகின்றனர். இதுகாலை இன்னோர் தேசாட்சி, நாடுபிடித்தல், ஆகியநோக்கத்திற்காக அனுஷ்டித்து வரும் நவீனப் போர் முறைச் சாதனங்களை நோக்குங்கால் பெரிய வியப்பளிக்கின்றது. பொதுவாக இக்கால நாகரீக உலகத்தினர் சரீரப் பிரயாசைக்குபதிலாய் ஆவிபலத்தைக்கொண்டு உலகாள முற்பட்டுள்ளனர்.

ஆதியில் இவ்வித விபரீத சக்திகள் தொழிலபி விருத்தியைக் கருதியும், வெளிநாடுகட்கு இவைகளை உதவுதலைக் கருதியும் கையாளப்பட்டு வந்தன. புகை, ஆவியினால் இயக்கப்பட்ட கப்பல், ரயில், மோட்டார் முதலியன மனிதப் பிரயாசையால் பல மாதஞ் செய்வதற்குரித்தாயிருந்த அரிய காரியங்களை ஒரு சில மணிகட்குள் தீர்த்து வைத்து விடுவனவாய் விளங்கலாயின. ஆகவே இவ்விநோத விபரீதச் சாதனங்களை சுயநலமும், பேராவலும் பூண்ட ஐரோப்பிய சமூகத்தினர் அரும்பெரும் அருட்பாக்கியமெனக் கருதி இவற்றையே பெரிதும் கைக்கொண்டு அன்னிய நாட்டினர்மீது ஆதிக்கங்கொள்ளலாயினர். இங்ஙனம் காலஞ் செல்லச்செல்ல இப்புகை, ஆவி சக்தியின் திருவிளையாடல்கள் யாண்டும், யாவர்பாலும், எங்ஙனும் சர்வ சாதாரணமாய் வியாபித்துவிட்டன

## மின்சாரம்

சிலகாலமாக ஐரோப்பிய நாட்டாரின் அறிவினின்று மற்றுமோர் அரிய அற்புத சக்தித் தோன்றி உலகின்கண் வியாபித்து வருகின்றது. புகை, ஆவி சக்திகளைவிட இப்புதுச் சக்தி அபார ஆற்றலும், மகா வன்மையும் படைத்ததாயிருக்கின்றது. இவ்வித அற்புதம் வாய்ந்தது மின்சார சக்தியாகும். இம் மின்சார சக்தியினால் செய்யவியலாத காரியம் ஒன்றுமில்லை என்றும் மேனாட்டார் வாதிக்கின்றனர். இதன் அனுபவ முறையும், பயன்பெறும் வகையும் அதி நுட்பமானவைகளெனினும், இவை இதுகாலை மக்களது வாழ்க்கையில் சாதாரணமாய் வியாபித்து வருகின்றது.

இவ் அரும் மின்சார சக்தி கண்டுபிடிக்கப்பட்டு சுமார் அரை நூற்றாண்டு தானாகின்றது எனினும் அறிவிற்குமெட்டாத பாரதூரமான காரியங்களையும் இச்சக்தியின் வாயிலாய் செய்து முடித்தற்கூடுமென்னும்விஷயம்தான் மகா அற்புதமாயிருக்கின்றது. மேலும் இச்சக்தி இதுகாலை உலகிலுள்ள சர்வ காரியங்களுக்கும் தேவையானதாய்க் கருதப்பட்டு வருகின்றது.

## இவையன்றி மற்றொரு அபூர்வ சக்தி.

ஈண்டுக் கூறப்பட்ட முவ்வருஞ் சக்திகளு மனிதரின் அறிவிற்குட்பட்டவைகளே. இவற்றின் ஆற்றலும் ஆக்கமும் அளவு கடந்தனவாகா. இவை மனித புத்தி சூக்ஷுமத்தின் பிரயாசையின் பலனாகும். இந்நாகரிக காலத்தில் மக்கட் கோடிக்கு அரும்பயனளித்து வருவது இம்முச்சக்தி மட்டுமன்று. இவையன்றி நான்காவதோர் அருஞ்சக்தி யொன்றுண்டு. இஃது மற்ற மூன்றுவிதச் சக்திகளைக் காட்டினும் மேலான மகத்துவமுடையதாகவும், அச் சக்திகளெல்லாவற்றின் பயன்களையும் சாத்வீக முறையில் தன்னகத்தே அடக்கியப்பெற்றதாகவும் மிளிர்கின்றது. இத்தகை சக்தியினால் தற்கால நாகரிகமும், அறிவாற்றலுமுள்ள பிரஜைகள் எண்ணிறந்த பிரயோஜனங்களைப் பெற்றுய்கின்றனர். இச்சக்தி ஒ



சமயத்தில் உலகமுற்றும்வியாபித்து ஆற்றலைக் காட்டும் பெற்றிவாய்ந்தது. இத்துணை மகத்துவம் பொருந்தியசக்தி ஏதாயிருக்குமோவென நேயர்கள் வியக்க வேண்டியதில்லை. ஏனெனின் இச்சக்தி சாதாரணமாக இதோ உங்கள் முன்னிலையிலேயே யிருக்கிறது.

## அஃதி யாது? அதுதான் பத்திரிகா சக்தி!

பத்திரிகா சக்தி, அல்லது உலகின்கண் செய்திகளைப் பரவச் செய்யும் சக்தியைவிட இத்தரணியில் வேறொன்றுமில்லை யென்று கூறினுந் தகும். பத்திரிகா சக்தியின்முன் யுத்தவண்மை, பீரங்கித்தாக்கு, துப்பாக்கிக் குண்டு ஆகியவை ஒரு சிறிதும் எதிர்த்து நிற்க முடியா. பொருளாதாரம், வாழ்க்கை ஆசாரம், பிரயத்தனம், வெற்றி இவைகள் பக்திரிகாசக்தியை சீர்குலைக்க முடியாது. ஈண்டு கூறப்பட்டுள்ள இதர எல்லா சக்திகளும் தலைமைஸ்தானம் வகிக்கும் பத்திரிகா சக்திக்குக் கீழ்ப்பட்டுப் பணிந்து டக்க வேண்டியவைகளேயாகும், எந்த சக்தியும் நிலைத்திருக்கவேண்டுமாயின் பத்திரிகா சக்தியின் ஆதரவு இல்லாமல் நிலைக்க முடியாதென்பது திண்ணம். சுருங்கக் கூறுமிடத்துத் தற்கால உலகமும் வருங்கால உலகமும் இவற்றிற்கு நன்மை தீமை ருதல் யாவும் பத்திரிகா சக்தியைப் பொறுத்ததாகவே யிருக்கின்றன வென மொழியலாம்.

## இந்தியாவின் பத்திரிகா சக்திநிலை.

இந்தியாவின்கண் ஒழுங்கானமுறையில் இச்சக்தித்தோன்றி நெடுங்காலமாயிற்றன்று. கவே இச்சக்தி இந்தியாவின்கண் பூர்த்தி யி இன்னும் வியாபிக்கவில்லை. ஆனால் னாகிய ஐரோப்பாவிலோ இச்சக்தி ன்பாடடைந்துள்ளது. இன்னும் அமெக்க மக்கள் வயிற்றுக்குணவு கிடைக்காமற் போயினும் பத்திரிகைப் படித்து பயன்பெறும் கடமையைமாத்திரம் எஞ்ஞான்றும் மறவாதவர்களா யிருந்து வருகின்றனர். உதாரணமாக, "நியூயார்க் டைம்ஸ்' என்னும் அமெரிக்காவின் பெரிய பத்திரிகை உலகில் மிகமிகத் தலைசிறந்ததாகும். இஃது தினமும் 40 பக்கங்கொண்ட பெரும் பிரதியாய் காலநேரந் தவறாது பிரசுரிக்கப்படுகின்றது. இவற்றில் 25 பக்கங்கள் விளம்பரங்களுக்காக ஒதுக்கப்படுகின்றன. ஞாயிற்றுக் கிழமைதினம் வெளியாகும் விசேஷப் பிரதி 100 பக்கங்களுடையதாகும். இப்பத்திரிகாலயத்தை மிஸ்டர் ஹாக்ஸ் என்பார் சென்ற கி. பி. 1896-ல் 75 ஆயிரம் டாலர்கட்கு தான் விலைக்கு வாங்கியிருந்தார். சென்ற 24 வருடங்களுக்குள் இது மிக அபூர்வ அபிவிருத்தியடைந்து விட்டது. தற்போது அப்பத்திரிகையின் வருடாந்திர வருவாய் பத்துகோடி டாலர்களாகும் (டாலர் 3 ரூபாய்) மேலும் தினந்தோறும் இப்பத்திரிகாலயத்தில் சுமார் 40-ஆயிரம் டாலர்கள் செலவாகின்றன. நம் இந்தியர் தம் கடமையையுணர்ந்து பத்திரிகைப்படித்துப் பயன்பெறுவதில் முன்னுக்குவருவார்களாயின் நம்மவரும் உலகவியல் வன்மையில் மேனாட்டினரைக்காட்டினும் பல விதத்தில் சிறந்து விளங்குவரென்பது திண்ணம், திண்ணம், திண்ணம்.

நிற்க போயியர் யுத்தம் மூண்டது எதுபற்றி? மகாயுத்தக் கொடுஞ்சம்பவங்கள் துரிதத்தில் அடங்காது நீடித்துக்கொண்டிருந்தமை எது பற்றி? சீனதேசத்தில் புரட்சித்தலை தூக்கியமை எதுபற்றி? தேரான் தேசம் முன்னேற்றமடைந்தமை எதுபற்றி? ஐரோப்பா தேசம் இதற்குமுன் வியாபாரப் பொருளாதாரத் துறையில் தீவிர முன்னேற்றமடைந்து சிறந்து விளங்கியமை எதுபற்றி? ஆங்கிலேயர்கள் உலக மனைத்திலும் பரவி ஏகாதிபத்திய ஆதீனம் பெற்றிருத்தல் எது பற்றி? இதுகாலை இராஜீயம் தேசீயம் சுதந்திரக் கிளர்ச்சி முதலியன வெல்லாம் பற்பல மாறுதல் பெற்று ஜெயமும் வெற்றியும் பெறுதல் எதுபற்றி? அமெரிக்க தேசத்தினர் பொருளிலும் விஞ்ஞானத்திலும் செல்வாதீனத்திலும் சிறந்தவர்களென கண்ணியம் பெற்றமை எதுபற்றி? நம் இந்திய தேசத்துத் தேசீய சமூதாயப் பிரயத்தனங்கள் வன்மைபெறுதல் எதுபற்றி? இவ்வெல்லா வினாக்கட்கும் எல்லாம் பத்திரிகா சக்தியினால்தான்" என்று விடையளித்து விடலாமன்றோ? —

## முன்னேற்ற சாதனம் பத்திரிகையே

ஐரோப்பிய மகாயுத்தத்தினால் துருக்கி தேசம் பற்பல வித நஷ்டச் சங்கடங்கள் அனுபவித்து நலிந்திருந்து, இதுபோழ்து புத்துணர்ச்சியும், முன்னேற்றமும் அடைந்து

வருவதும் பத்திரிகையின் சகாயத்தினால் தான். மக்களுக்கு ஊக்கமும் உற்சாகமும், உய்யும் வழியும் போதிப்பதற்கு துருக்கியில் தகுந்த சாதனமாயிருப்பது சில இஸ்லாமியப் பத்திரிகைகளேயாகும். சுருங்கக் கூறுமிடத்து பத்திரிகா (பிரஸ்) சக்தியானது உலக வாழ்க்கையில் ஒவ்வொரு சாராரும் முன்னேற்றமடைதற்கும் அத்தியாவசியமானதாகும். பத்திரிகா சக்தி அற்ப சொற்பமானதன்று. பத்திரிகாதரவினால் தான் சுயேச்சையிழந்த சமூகத்தினரோ தேசத்தினரோ சுயேச்சையும் முன்னேற்றத் தினையுமடைதல் முடியும். அரசாங்க ஆக்ஷியின்வன்மையான அடக்கு முறையைவிட்டும் ஆளப்படும் எளிய மக்கள் விடுதலையும் சுதந்திரமும் பெறுவது பத்திரிகா சக்தியினால் தான் முடியும். ஏதேனுமொரு சமூகமோ தேசமோ பத்திரிகா சக்தியைப்பெற்று பயன்பெறாதிருந்துவிடுமாயின் அச்சமூக தேசம் முன்னுக்குவரவியலாமல் பிற்போக்கெனும் படுகுழியில் வீழ்ந்து மாய்ந்துபோம் என்பதில் எட்டுணையும் சந்தேகமில்லை.

### இந்திய முஸ்லிம்கள் நிலை

இதுகாலை நம் இந்திய முஸ்லிம்களிடையே பத்திரிகா சக்தியின் ஆதர விருக்கிறதா? என்னும் கேள்வி மிக மிக முக்கியமானதாகும். இந்திய முஸ்லிம்களிடை பத்திரிகாசக்தி வியாபித்து வன்மைப் பெறுதற்கு அவர்களுள்ளத்தில் பத்திரிகாபிமானம் தழைத்தோங்கியிருக்கிறதா? என்னும் விஷயம்தான் மிக முக்கியமானதாகும் இஸ்லாமிய பத்திரிகைகளோ, சஞ்சிகை மாசிகைகளோ சமூக சக்தியை உலகில் பரத்திவன்மையுறச் செய்வதற்கு வாசகர்களாகிய சந்தா நேயர்களின் ஆதரவும் அபிமானமும் அத்தியாவசியமாய் முதன்மையாயிருத்தல் இன்றியமையாததாகும். தற்கால இந்திய முஸ்லிம்களிடையே பத்திரிகாபிமானம் மிக மிகக்குறைந்த அளவில்தானிருக்கிறதென்பது யாவருமறிந்த விஷயம்.

இங்ஙனம் இந்திய முஸ்லிம்கள் பத்திரிகாபிமானத் துறையில் மிகப் பிற்போக்கில் காணப்படுதற்கு முதற்காரணம், இன்னோர் கல்வி ஞானத்துறையில் ஆற்றல் குறைந்தோராயிருப்பதாகும். இரண்டாவது காரணம், இந்திய முஸ்லிம் மக்கள் பொருளாதாரத் துறையில் மிக க்ஷீணித்து ஏழ்மையாளராயிருப்பதாகும். இன்னமும் முஸ்லிம் மக்கட்கு கல்வித் துறையில் உற்சாகமும் ஊக்கமும் புகட்டுவதற்கு பத்திரிகைகளும், சஞ்சிகை களும் மிகுந்திருப்பது அத்தியாவசிய மாதலால், இவை போதியவளவில்லா திருப்பதும் இந்திய முஸ்லிம்களின் பிற்போக்குக் கொரு காரணமாகும். இவ்விந்திய நாட்டிலேயே உள்ள பிற சமூகத்தினர்க்குள்ள பத்திரிகா சக்தியை கவனிப்போமாயின் நாம் வருந்தாமலிருக்க முடியவில்லை. இந்தியாவின் முஸ்லிமல்லாதார் தம் சமூகப் பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் முன்னுக்குக் கொண்டுவந்து அபிவிருத்திப்படுத்த தம் சம்பாத்தியத்தின் ஒரு பாகத்தையே அவசியமாய்ச் செலவிடுகின்றனர், ஆகவே அன்னோர் சமுதாயச் செல்வாக்கு விஷயத்தில் முஸ்லிம்களைவிட முன்னணியில் நிற்கின்றனர். மேலும் அச்சமூகத்தினர் பத்திரிகா சாதனத்தையே தங்கள் உயர்விற்குரிய அருமருந்தாய் உபயோகிக்கின்றனர். பத்திரிகையின் பலத்தைகொண்டே அன்னோர் தங்கள் இயக்கங்களையும், கிளர்ச்சிகளையும் வன்மைப்படுத்திக் கொள்ளுகின்றனர்.

பொதுவாக பத்திரிகா சக்தியைக் கண்டு உலக முழுதுமே நடுக்குறுகின்றது சரீர சக்திக்கும், பீரங்கிக்குண்டுகட்கும், மின்சார விபத்துக்கும் அஞ்சாத ஆதீனங்கூட பத்திரிகா சக்திக்கு பயந்து அடங்குகின்றதெனின், பத்திரிகா சக்தியை என்னென்று புகழ்வது! பத்திரிகா சக்திக்கு அரசாங்கம், முடிமன்னராட்சி ஆகிய யாவும் அஞ்சி சிரம் பணிந்துவிடுகின்றன வென்பதை நாம் உலக அனுபவத்தில் காண்கின்றோம். இன்னமும் பத்திரிகைகளின் எதிர்ப்புக்கு அஞ்சாத வீரரோ, அறிஞரோ, விரோதிகளோ, சுயநலங்கொண்ட தலைவர்களோ இலர் என்பது உண்மை.

இத்துணைச் சக்தி வாய்ந்த பத்திரிகைகளை, இஸ்லாமிய பத்திரிகைகளை, நம் இந்திய முஸ்லிம் சமூகத்தினர் ஏற்று ஆதரித்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது அவர்கள் கடமையன்றோ! முஸ்லிம்காள்! பத்திரிகையின் நன்மைகளை உணர்ந்து கொண்டபின்னருமா இனிவாளாயிருக்கப் போகின்றீர்கள்? எழுங்கள்! உங்கள் சமூகமும், சன்மார்க்கமும் உயிர்ப்பித்து முன்னேற்ற மடைய உண்மை இஸ்லாமியப் பத்திரிகைகளை ஆதரித்து அபிவிருத்திக்குக் கொண்டுவாருங்கள்.

# முஸ்லிம் பெண்களும், பர்தா கட்டளையும்.

" அப் பெண்மணிகளிடமிருந்து நீங்கள் ஏதேனுங் கேட்டுப் பெறவேண்டுமோயின் திரைக்கப்பாலிருந்து அவர்களைக் கேளுங்கள்; இவ்வொழுங்கானது உங்களுடைய ஹிருதயங்களையும் அப்பெண்களுடைய ஹிருதயங்களையும் பரிசுத்தமாக்கி வைக்கும் "

(பாகம் 22,7-அல்குர்ஆன்.)

பெண்மணிகள் திரைமறைவில் இருக்க வேண்டுமென்ற பர்தாவின் இத்தெய்வக் கட்டளை பிறப்பிக்கப் பட்டமை, 'காலங்களில் சிரேஷ்டமானதென' (கய்ருல் குரூன்) என்று நபிகள் திலகம் ரஸூல் (ஸல்.) அவர்கள் சிறப்பித்துக்கூறியுள்ள அப்பண்டைக் காலத்திலேயாகும். மேலும் இத் திருக்கட்டளை நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்களது உத்தமபத்தினிகளாகிய "உம்மஹாத்துல் மூமினீன்" கள்பேரில் இடப்பட்டதாகும். நபிகள்பிரான் (ஸல்.) அவர்களின் உத்தம பத்தினிமார்கள் சற்குண நல்லொழுக்கத்தாலும், தெய்வபக்தி மேன்மையினாலும் உம்மத்துகளாய மூமின்களுக்கெல்லாம் அன்னைமார்களாகப் பாவிக்கப்பட்டு வந்தார்கள். மேலும்அவ் அன்னைமார்களை எக்காரணத்தை முன்னிட்டும் பிறர் விவாகஞ் செய்துகொள்ளக்கூடாது (ஹராம்) என்றும் கட்டளையிடப்பட்டிருந்தனர். ஈதன்றி அப்பண்டைக் காலத்து கண்ணியம் மிக்க சஹாபாக்களும் கலீபாக்களும் மிகமிக சத்தியவான்களாயுமிருந்தனரென்பது வெளிப்படை.

நிற்க, மேற்கூறப்பெற்ற குர்ஆனின் திருக்கட்டளையானது உத்தமபத்தினிமார்கள் விஷயத்திலும் சஹாபாக்கள் (றலி.) முதலியோர் விஷயத்திலும் இடப்பட்டிருக்குங்கால், இப்பிற்கால விபரீதம் மலிந்த நம் மக்களுக்கு பர்தா, கோஷா கட்டளை எத்துணை அத்தியாவசியமானதென்பதை விளக்கவும் வேண்டுமோ?

அக்கட்டளையானது உத்தம சஹாபாக்கள்மீதுமட்டும் விதிக்கப்பெற்றனவென்று கூறல் பொருந்தாது. ஏனெனின் இங்ஙனம் பெண்மணிகளிடம் உத்தமர்கள் நெருங்க நேரிடுங்கால் பர்தா கோஷாவுக்குப் புறமிருந்து கொள்ளவேண்டுமென்று கூறப்பட்டிருப்பதால், மற்றப் பாமரர்களும், விவேகமற்றவர்களும், நல்லொழுக்க மற்றவர்களும் பெண்மணிகள் விஷயத்தில் எத்துணைப் பேணுதலுடனும், அச்சப் பாட்டுடனும் நடந்துகொள்ள வேண்டுமென்பது அறிஞர்கட்கு விளக்கவேண்டியதில்லை.

நேயர்காள்! நாம்வாழும் இப்பதினான்காம் நூற்றாண்டு எத்துணை நவநாகரிகத்திய ஒழுக்கம் மிகுந்ததென்பதும், பெண்கள் வெளிப்புறப்பட்டலைவதினால் பாதகங்கள்எத்தனை நேரிடுமென்பதும், பெண்கள் பர்தாவுக்குளிருந்து அன்னிய ஆடவர்களது சகவாசத்தைவிட்டும் ஒதுங்கி தங்கள் கற்பையும் மர்மத்தலங்களையும் எவ்வாறு பாதுகாத்துக் கொள்ளவேண்டுமென்பதும் ஈண்டு விளக்கப்படுவதெனின் மிகமிக நீளமாய்விடும். இத்தகைய 'பித்னா' மலிந்தகாலத்தில் தான் கோஷா பர்தா மிகமிக அத்தியாவசியமாய் அனுஷ்டிக்கப்பட வேண்டியதாயிருக்கின்றது. இதுகாலை ஒரு சில விபரீதப்புத்தியுடையவர்கள் குர்ஆனிலுள்ள பர்தா ஒழுக்கக் கட்டளைகட்கு குதர்க்க குயுக்தி தப்பருத்தங்களைச் செய்து பர்தா கட்டளை நம் ஷரீஅத்தில் கிடையாதென்ற பிடிவாதங்கொண்டு தங்கள் பெண்மணிகளை வெளியிடங்கட்குத் திறந்தமேனி மினுக்குடன் அழைத்துச் செல்வதும், பொதுவிடங்களில் கேலி விளையாட்டுகள் புரிவதும், தனியே தம்பெண்களை பிற ஆடவர்சமுகத்துக்கு அனுப்பிவைப்பதும் எத்துணைக் கொடிய இழித்தொழிலும் பாதகச்செயலுமாகுமென்பதை விளக்க வேண்டியதில்லை. இச்செயல் ஆண்டவனால் பொறுத்தற்பாலதன்று.

இஃதிங்ஙன மிருக்க, யாவரும் சேர்ந்து ஏகதெய்வ வணக்கமாய தொழுகையை ஒன்றுகச்சேர்ந்து ஜமாஅத்துடன் நிறைவேற்றுவது மிக மிக சிலாக்யமானதாயிருக்கின்றது. எனினும், ஆடவரும் பெண்டிரும் மஸ்ஜிதிலோ வேறெவ்விடத்திலோ ஒன்றுகூடிக் கலந்துறவாடுவார்களாயின் பாதகச் செயல்கள்பல தோன்றிவிடுமென்பதற்காக மஸ்

ஜிதுக்கும், பொது இடங்கட்கும் பெண்மணிகள் போதலும், ஆடவர்களுடன் கலந்துறவுதலும் கூடாதென்று நம் ஷரீஅத்தில் வலியுறுத்தப் பெற்றுள்ளது. நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் ஜீவியத்தின் ஆரம்ப காலத்தில் அராபியநாட்டில் பெண்கள் ஆடவர்களுடன் கலந்து பொதுஸ்தலம் - மஸ்ஜித் ஆகிய இடத்தில் ஜமா அத்துடன் (பர்தாவின்றி) தொழுதுக் கொள்ளும் வழக்கமிருந்ததெனினும் கலந்துறவினால் பாபச் செயல் ஏற்படுமென்பதைக் கருதி, பெண்கள் மஸ்ஜிதுக்கு - மிக மிக வருசையுள்ள ஜமாஅத்து தொழுகைக்குங்கூட செல்லலாகாதென்று தடையுத்தரவு பிறப்பிக்கப் பெற்றுள்ளது.

சத்திய குர்ஆனின் திருமொழிகளும் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களினுடையவும் மஹான்களுடையவும் கட்டளையுபதேசங்கள் பர்தாமுறையின் அவசியத்தை யொட்டி இங்ஙனம் போதித்திருக்க, ஒரு சில புல்லறிவாளர்கள் அவ் வாக்கியங்களுக்கு மொழிப்பெயர்ப்பும் வியாக்கியானங்களும் கூறுங்கால், இஸ்லாம் மார்க்க ஷரீஅத்தின் ஆசாரத்தையே அடியோடு குலைப்பான் வேண்டி தவறான அருத்தத்தையும், நம்பிக்கையற்ற ஆதாரங்களையும் எடுத்தோதி பாமர மக்களை வழிக்கெடுக்கின்றனர். இன்னும் ஒரு சிலர் குர்ஆன் வாக்கியங்களுக்கு பொருத்தமற்ற (தாவீல்) வியாக்யானஞ் செய்து அதற்குத் புகலான சமாதானங்கூற எழும்புகின்றனர். இன்னுஞ் சிலர் ஏழு மகா கிரந்தங்களாய "ஸிஹாஹ் ஸித்தா" வின் வாக்கியங்களுக்கு விபரீதக் கருத்துக்கொடுத்து தங்கள் முரண்பட்ட கூற்றுகட்கு ஆதாரமாய்க்காட்டுகின்றனர். இவ்விதக்கூற்றுகள் குர்ஆனின் விளக்கமான கட்டளைக்கும், மெய்யான நாயகத் திருமொழிகட்கும், மகான்களின் திருநீதிகட்கும் முற்றும் விரோதமாகுமென்பதில் ஐயமில்லை.

பர்தா கட்டளையைப்பற்றி குதர்க்கம் புரியுங்கால் வேறு சிலர், பெண்கள் கோஷா அனுஷ்டிக்க வேண்டியதின் உண்மைக் கருத்துக்களையும் ஆழ்ந்த நோக்கங்களையும் ஒரு சிறிதும் ஓர்ந்து பாராமல், "கோஷாவைப்பற்றி குர்ஆனில் பிறப்பிக்கப்பட்டுள்ள கட்டளை நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது உத்தம பத்தினியார்க்கும், சஹாபாக்களின் பத்தினிகட்குமே சொந்தமாகும். நம்போலொற்ற உம்மத்துகளுக்கு இக்கட்டளைகள் சாராதென்றும், அதனை அனுஷ்டிக்கவேண்டியது கடமையல்ல வென்றும் இயம்புகின்றனர். என்னே இன்னோரது விதண்டாவாத விபரீதம்! பெண்கள் கோஷா அனுஷ்டிப்பதால் ஆசாரம் கெட்டுவிடுமென்றும், மாதர்கள் கோஷா அனுஷ்டிக்காவிடின் ஷரீஅத்தாசாரத்தில் சீர்திருத்தமடைந்து முன்னுக்கு வந்து விடுவரென்றும் கருதிக்கொண்டனர் போலும்!!

கோஷா விஷயமாய் குர்ஆன் ஆயத்திலும் நாயகத் திருமொழியிலும் கூறப்பெற்றுள்ள போதனை பொதுவாக உம்மத்துகள் எல்லோருக்குமல்ல வென்றும், அவை நபிகள் திலகம் (ஸல்.) அவர்களின் உத்தம பத்தின் களுக்கு மட்டுந்தானென்றும் கருதிக்கொண்டுள்ள தவறான எண்ணமுடையார்க்கு ஈண்டு தக்க ஆதாரத்துடன் சிறிது சமாதானம் அறைவோம்.

இஸ்லாம் மார்க்கம் உதயமான ஆரம்ப காலத்தில் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கட்கு "வஅன்திர் அஷீரத்தகல் அக்றபீன் (அதாவது:—உங்கள் நெருங்கிய சுற்றத்தார்கட்கு, அல்லாஹ்வின் கட்டளைப்பற்றி அச்சம் புகட்டுவீராக) என்று வந்துள்ள குர்ஆன் வாக்கியம் எல்லாருக்கும் பொதுவானதா அல்லது நாயகத்தின் சுற்றத்தாருக்குமட்டு குறிப்பானதா? என்பதை ஈண்டு ஒவ்வொ வரும் உன்னிப்பார்த்தல் வேண்டும். அச்ச புகட்டலென்பது, ஜனங்களை சன்மார்க்க தின் பக்கம் ஹிதோபதேசம் புரிந்து அழை பதும், ஆண்டவன் பாபிகளுக்கு ஏற்படுத் யுள்ள தண்டனைகள், வேதனைகள் ஆகியன களைப்பற்றி அச்சம் புகட்டி எச்சரிக் செய்வது மாகுமென்பது வெள்ளிடைம "உங்கள் நெருங்கிய சுற்றத்தாருக்கு அச்ச புகட்டுவீராக" என்னுங் கட்டளை எம்பெ மானார் (ஸல்.) அவர்கள்பால் இறைவ அருளப்பெற்றதும், இக்கட்டளையைத் தம சுற்றத்தார்க்கு மட்டுந்தான் என்று கரு இஸ்லாமியப் பிரசாரத்தை பிற ஜனங்கட் புரியாதிருந்து விட்டார்களா? அன்று, அன் இக்கட்டளையில் சுற்றத்தார் பெயர் கூறப்ப டிருப்பினும் விஷயம் பொதுப்படையான யால் எம்பெருமானாரவர்கள் பொதுவ அக்கால எல்லா ஜனங்களிடையே இ



லாமிய பிரசாரத்தையும், சமுதாய சீர்திருத்தத்தையும், நற்குண நல்லொழுக்கத்தையும் புகட்டினார்கள். எனவே மேற்கூறப்பெற்ற குர்ஆன் கட்டளையை அனுசரித்தே எம்பெருமானார் இஸ்லாமிய பிரசாரம் புரிந்துவந்தனர். எவ்வாறெனின், இஸ்லாமியப் பிரசாரம் முதன் முதல் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களுடைய சுற்றத்தினரில்னின்றே தான் ஓங்கித் தழைக்கத் தலைப்பட்டது. முதன் முதல் பெண்களில் ஹஜ்ரத் கதீஜா நாயகி, பாத்திமா நாயகி, ஸபிய்யா (ரலி.) ஆகியவர்களும், ஆடவர்களில் சிறிய தகப்பனார் ஹஜ்ரத் அப்பாஸ், ஹஜ்ரத் அலி (ர்லி.) ஆகியவர்களும் பரிசுத்த தீனால் இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டார்கள். நாயகத்தின் சுற்றத்தார்களுள் முக்கியஸ்தர்கள் முதலில் ஈமான் கொள்ளவே, பிறகு மற்றோரும் பொது ஜனங்களும் கூட்டங் கூட்டமாக இஸ்லாத்தில் சேர்ந்துகொள்ளலாயினர். இவ்வாறே தான் பர்தா ஆசாரத்தின் கட்டளையானது நபிகள் பிரானின் பத்தினிமார்கள் விஷயத்தில் அருளப்பெற்றதாயிருப்பினும், இஸ்லாத்தைப் போலவே அதுவும் எல்லோரிடத்தும் பொர்துவானதாகும். ஆகவே முஸ்லிமாவாகிய ஒவ்வொரு பெண்களும் பூரண கோஷாவை அனுஷ்டித்துதான் தீரவேண்டும். இதிலேதான் நபிகள் ஸல்.) அவர்களின் ஸுன்னத்தும், அழகிய ன்மாதிரி யெனப்படும். "உஸ்வயெ ஹஸ "வும் அமைந்திருக்கின்றன.

உண்மை இங்ஙன மிருக்க, இதுகாலை சுய ல நோக்கங்கொண்ட ஒரு சிலர் சன்மார்க்க ண்மை, ஞான ஆற்றல் போதிய மட்டுமில்லா ஆங்கிலத்தையும் இதர பாஷையையும்மட் கற்று குர்ஆனுக்கு தமதிஷ்டம்போல் மொ பெயர்ப்பு வியாக்யானமெழுதவும், கோஷா ர்தாவைப்பற்றி எதிர்ப் பிரசாரம் புரியவும், ன்மார்க்கக் கொள்கைகளில் மாறுதலும் பரீதமும் புரியவும் துணிந்துழல்கின்றனர். இன்னோர் தங்களை இஸ்லாத்தின் ஊழியர்களென்றும், முஸ்லிம்களின் தலைவர்களென்றும், குர்ஆனின் கிரந்த கர்த்தாக்களென்றும் றிக்கொள்கின்றனர். இன்னோர்களால் இஸ்லாத்துக்கும், முஸ்லிம் சமூகத்துக்கும் நல க்கு பதிலாய் பற்பல தீமைகளே விளைகின்றன. இது மட்டுமா? இன்னோர் பிக்ஹுமஸ் லா (மார்க்கக்கட்டளைச்சட்டம்) இவைகளை ம் திரித்துப் புரட்டிக் கூறத்தலைப் படுகின்றனர். இவ் விஷயத்தில் இன்னோர் தங்களை இமாம் "அபூஹனீபா" வென்றும், இமாம் ஷாபிஈ, இமாம் கஜ்ஜாலீ (ரஹ்.) யென்றும் மனோராஜ்ஜியஞ் செய்துகொண்டனர் போலும்! இத்தகையோரால் இஸ்லாம் சீர்குலைந்துவிடும் என்னும் அச்சம் ஏற்படுகிறபடியால் பொது மக்களும் மற்றோரும் விழிப்படைந்து, அவர்கள் வலையுள் விழாமல் தங்கள் ஈமானைக் காத்துக் கொள்வார்களாக!

நிற்க, பெண்கள் கோஷா பர்தாவை அநுஷ்டித்து மறைமுகமா யிருக்கவேண்டுமென்பதற்கு அப் பெண்களின் தன்மையில் ஆண்டவன் என்னென்ன அம்சங்களை உண்டாக்கியுள்ளா னென்பதை ஈண்டு கவனிப்போம். நமது சன்மார்க்க விஷயம் ஒவ்வொன்றும் பகுத்தறிவுள்ள புத்திக்கும் யுக்திக்கும் ஒத்த மைந்ததாகும். இவ்வாறே கோஷா பர்தா விஷயமும் பகுத்தறிவுக் கொத்ததாகும்.

மகா சக்தியும் தத்துவமும் பொருந்திய அல்லாஹுதஆலா பெண்பாலாரின் சுபாவத்தில் மனோவசியமான தோற்றத்தையும், உல்லாச நடிப்பையும், மனத்தை மகிழச் செய்யும் கவர்ச்சியையும் அருளியுள்ளான். இன்னமும் அப் பெண்களினது மெல்லிய சரீரத்திலும் முகத்திலும் ஒருவிதமான வசீகரண சக்தியைப் புகட்டியுள்ளான். இவ்வம்சங்களைக் கண்டு அப் பெண்ணின் சொந்தப் புருடன் அவளை ஆதரித்து அன்புடன் நடத்த வேண்டுமென்பதற்கேயாகும். இத்தகைய பெண்ணின் வனப்பையும் தேஜஸையும் பிறப்புருடர்கள் வெளிப்படையாய்ப்பார்ப்பார்களானால் இயற்கையாகவே இன்னோரது உள்ளத்தில் அப்பெண்ணால் இன்பம் எய்தவேண்டு மென்னும் தீய எண்ணம் உதிப்பதுண்டு. இவ்வாறே ஓர் இளவாலிபனை ஒரு நங்கைக் காண்பாளாயின் இவள் மனத்திலும் அவ்வாடவனை மணந்து இன்பப் நுகரவேண்டுமென்ற ஓர் அவா இயற்கையாய் ஜனிப்பதுண்டு, இத்தகைய நிலையில் இருதரத்தாரும் அன்னியர்களா யிருந்து சந்திப்பார்களாயின் இவர்களிடையே துராகிருதம் ஏதேனும் நிகழ்ந்து விடுமென்பதும் கூடும். இத்தகைய துர்க்கிருத்தியமும் பாபச் செயலும் நேரிடக்கூடாதென்ற ஆசார ஒழுக்கப் பாதுகாப்பு சாதனமாகவேதான் கோஷா - பர்தா கட்டளை இடப்பட்டிருக்கிறது. கோஷா-பர்தா அனுஷ்டிப்பதன் அளவிறந்த நன்மைகளை

நாம் கண்கூடாகவும், அனுபவ வாயிலாகவும் தெரிந்து வருகின்றோம். உதாரணமாக கோஷா - பர்தா வழக்கமில்லாத ஆங்கிலேய ஹிந்து ஸ்திரிகளிற் பெரும்பாலார் எத்தனையோ விதமான பாபக் கிருத்தியங்களில் மூழ்கி பாபத்தின் உருவங்களாக யிருப்பதையும், கோஷா-பர்தா அனுஷ்டிக்கும் முஸ்லிம் உத்தமிகள் சத்திய சன்மார்க்க ஒழுக்கம் ததும்பி நிற்பவர்களாக யிருப்பதையும் நாம் காணாமலில்லை. ஆனால் ஒருசாரார் பெண்கள் கோஷா அனுஷ்டித்து வீட்டுக்குள்ளிருப்பதால் நோய்கள் அணுகி தேக சுகம் கெடுகிறதென்று கூறுகின்றனர். அப்படியானால் கோஷாவின்றி பல இடங்களுக்கும் அலைந்து திரிந்து கண்டபுருடரைக் கூடிக் குலாவும் பெண்கள் துர்க்கிருத்தியங்களில் ஈடுபட்டு கொடிய நோய்களிற் சிக்குண்டு நொந்து வாதனையுறுவதில்லையா? யென்று யாம் கேட்கின்றோம்? கோஷாயில்லாதிருந்தால் பர ஸ்திரீயும்,பரப்புருடரும் கலந்துறவாடி காமத்தணல் தணிக்கலாமென்ற சுயநல எண்ணங்கொண்டோர்தான் கோஷா வேண்டாமென்று கூறத்துணிவர். நல்லொழுக்கமும், நற்சுபாவமும் மனித வாழ்க்கைக்கு அத்தியாவசியமென எண்ணியிருப்போர் கோஷா - பர்தா ஒழுக்கத்தை ஆக்ஷேபிக்கவே மாட்டார்கள்.

நிற்க, கோஷா - பர்தா முறை எங்ஙனம் - எவ்வளவு வரை அனுஷ்டிக்க வேண்டுமென்பதை ஈண்டு கூறி இதை முடிப்பாம். பண்டைக்கால அராபியப் பெண்கள் மனம்போனபடி யெல்லாம் தங்கள் உடல் பாகத்தைத் திறந்துகொண்டும், இஷ்டப்பட்டபடி யெல்லாம் ஆடை, ஆபரணங்களைப் பூண்டுகொண்டும் எதேச்சாதிகாரமாய் பர புருடர்களிடையே புகுந்து வழிந்துழன்று வந்தார்கள். இஸ்லாம் மதம் உதயமாகி எம்பெருமானார் நபிகள் பிரான் (ஸல்.) அவர்கள் மக்களுக்கு சன்மார்க்கத்தையும் நல்லொழுக்கத்தையும் புகட்டினார்கள். அதுகாலை நபிகள் நாயகத்தின் உத்தமிகளுக்கும் பொதுவாக எல்லா முஸ்லிமான பெண்களுக்கும் பின் வரும் குர்ஆன் ஆயத்தின் மூலம் பர்தாவின் முறை போதிக்கப்பட்டது :—

“ஏ நபியே! பெண்கள் தங்கள் போர்வையின் முன்றானையை தங்கள் (முகத்தின்) மீது மூடிக்கொள்ள வேண்டுமென்றும், இதுதான் தங்களை பிறர் யாரென்று தெரிந்துகொள்ளாமைக்கு தாழ்ந்த அளவென்று உங்கள் மனைவிமார்கட்கும், உங்கள் புத்திரிமார்கட்கும், மற்றும் மூமினான பெண்களுக்கும் போதிப்பீராக ; ஆண்டவன் பிழை மன்னிப்பவனாகவும், அருள்புரிபவனாகவுமிருக்கின்றான்” (குர்ஆன்.)

மேற்படி ஆயத்தில் உச்சரிக்கப்பட்டிருக்கும் “ஜல்பாப்” என்னும் வஸ்திரமானது பெண்கள் தம் உடல், முகம், தலை இவைகளை மறைப்பதற்காக போட்டுக்கொள்ளும் போர்வை யென்று ஹஜ்ரத் இப்னு மஸ் ஊத் (ரலி.) அவர்கள் கூறியுள்ளார்கள். ஆகவே பர்தா முறை அனுஷ்டிப்பான் வேண்டிப் பெண்கள் தங்கள் உடல், தலை, முகம் ஆகியவற்றை மறைக்க வேண்டுமென்பது அவசியமாகின்றது. மேலும், பெண்கள் தம் உடல் முழுவதையும் பூரணமாய் மறைத்துக் கொள்வதுதான் சரியான பர்தா முறை என்று போதித்திருக்கின்றார்கள்.

அரபியில் பெண்களுக்கு “அவ்ரத்” எனப் பெயர் கூறப்படுகிறது. “அவ்ரத்” என்னும் பதத்திற்கு அகராதி அருத்தம் “மறைக்க வேண்டியவை” எனப் பொருள்படுகின்றது. இதன்படி பெண்களின் ஒவ்வொரு உருப்பும் பர புருடரின் உள்ளத்தில் இச்சையின் ஆசையை உண்டாக்கக்கூடியதாயிருப்பதால் யாவற்றையும் மறைத்து வீட்டுள் கோஷா இருக்க வேண்டுமென்று நம் மார்க்கத்தில் கட்டளையிடப்பட்டுள்ளது. இவ்வாறின்றி இஷ்டப்படி யெல்லாம் உடைகளை யுடுத்தி உடல் பாகங்களைத் திறந்து பிறப் புருடர் கண்களில் படுமாறு நடந்துகொள்ளும் பெண்கள் மதிகெட்டு மானமிழந்து பாபத்துக்கு ஆளாவதுடன், மார்க்கக் கட்டளையையும் மீறி நடந்த பாபிகளாகிறார்கள்.

பெண்மணிகட்கு மானமும், கற்பும், நல்லொழுக்கமுமே சிறந்த ஆபரணங்களாகும். ஆகவே தங்கம் வெள்ளியாலான ஆபரணங்களை தம் மனைவி மக்களுக்கு அணிவிப்பதைக் காட்டினும் சன்மார்க்கத் திருவாபரணங்களாகிய கற்பு, மானம், நல்லொழுக்கம், நற் புத்தி, சற்குணம் இவற்றை அளிக்கும் ஆ வர்களே புத்திசாலிகளாவர். இங்ஙனமிருக்க பெண்களுக்கு கோஷாவே வேண்டாமென் அடம் புரியும் விபரீத நடத்தையாளரின் புத்தியீனத்திற்கு வருந்தாமலிருக்கக் கூ



வில்லை. எனவே, அல்லாஹ் ரஸூலின்மீது ஈமானும் பற்றுங் கொண்டு ஸுன்னத்துவல் ஜமா அத்துப்படி யொழுகும் ஒவ்வொரு முஸ்லிமும் இஸ்லாத்தின் உண்மையான இக் கோஷா - பர்தா முறையை அனுஷ்டித்து ஆண்டவனது பக்தர்களாய் விளங்குவார்களாக. நம்மவர்க்கு இறைவன் நல்லருள் பாலிப்பானாக. (ஆமீன்)

---

# இஸ்லாமிய விவாஹாசாரம்

விவாகஞ் செய்துகொள்ளல் சன்மார்க்கக் கருமங்களில் சிறந்த தொன்றாகும். உடலோம்பலுக்கு உண்ணலும் பருகலும் உறங்கலும் அவசியமாயிருப்பனவேபோல் மனுஷ்ய வாழ்க்கையின் பரிபக்குவத்திற்கும் தேர்ச்சிக்கும் விவாஹாசார இல்லற ஒழுக்கம் அத்தியாவசியமாகும். விவாகஞ் செய்துகொள்ளல் வெறுங்காமாந்தகார இச்சையினைப் பூர்த்திச் செய்து கொள்வதற்கெனக் கருதல் பேதமையாகும். விவாகமானது சன்மார்க்கா சாரத்துக்குட்பட்டு ஆண்டவனது கட்டளையை ஏற்று நடக்கும் தத்துவத்தை, உள்ளமையைப் பெற்றதாயிருக்கிறது.

விவாகம் ஆண்டவனது இயற்கை விதிக்கு இயைந்ததாயிருப்பதுடன், எம்பெருமானார் நபிகள் திலகம் ரஸூலுல்லாஹ் (ஸல்.) அவர்களுடைய முக்கிய ஸுன்னத்துகளில் ரிதொன்றாயுமிருக்கின்றது. விவாக பந்தத்தினால் பத்தினியாய் வரும் பெண் புருஷனுடைய பாதுகாப்பில் சன்மார்க்கப் பத்தினியாகவும் ஒழுக்க ஸ்திரியாகவும் மிளிரும் நற்றன்மை வாய்ந்தவளாவதுடன்,இஸ்லாமிய சமூகப் பிரஜாபி விருத்திக்கும் தக்க சாதனமா யிருக்கின்றனள்.

“முஸ்லிம்காள்! விவாகம் புரியுங்கள். இதனால் பிரஜாபி விருத்தியுண்டாகும். இறுதி (கியாமத்) நாளையில் அதிகமான உம்மத்துகளைக்கொண்டு யான் ஆண்டவனிடம் பெருமைபாராட்டுவேன்” என நற்கருத்துப்பட நமது நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் திருவுளம் பற்றியுள்ளார்கள்.

## விவாகத்தின் அனுகூலங்கள்.

இஸ்லாத்தில் விவாகம் செய்துகொள்வதினால் எண்ணிறந்த பிரயோஜனங்களும் அனுகூலங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றை ஈண்டெடுத்து விளக்குவோம் :—

## நான்கு நன்மைகள்.

(1) நிக்காஹ் செய்து வாழ்வதில் நான்கு அனுகூலங்களுள. அல்லாஹுதஆலா இத்தரணியின் கண் மானிடவர்க்கத்தைத் தோற்றுவித்த வணக்கம், பிரஜாபிவிருத்தி, சன்மார்க்கஜீவியம் ஆகியவை நிறைவேறுகின்றன. மேலும் ஆண்டவனால் மனிததேகத்தில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள இல்லற இன்ப உணர்ச்சியை இருசாராரும் தணித்துப் பூர்த்திப்படுத்திக்கொள்கின்றனர்.

(2) நிக்காஹ்வினால் எம்பெருமானார்(ஸல்.) அவர்களது ஒரு பெரிய ஸுன்னத்து நிறைவேறுகிறது. நபிகள் நாயகத்தின் “ஷபாஅத்து”க்கு நாம் உரியவராகின்றோம். புருஷன் அறிஞனாயும், மார்க்க ஒழுக்கஸ்தனாயுமிருப்பானாயின் இன்னவனை மனைவியும் பின்பற்றி யொழுகி சன்மார்க்கா சாரத்தில் உத்தமியாவள். இதனால் தப்லீக் பிரசாரமாவதுடன், இருசாராருக்கும் அளவற்ற புண்ணியமுண்டு.

(3) பெற்றோர்க்கு நல்ல சாலிஹான பிள்ளைகள் பிறந்து இஸ்லாமிய ஷரீஅத்தின்படி நடப்பாராயின் பெற்றோரும் இப்பிள்ளைகளும் இரக்ஷண்ணியத்திற்குரிய (நஜாத்துக்குரிய)வர்களாவர். பெற்றோரின் மரணத்துக்குப் பின் பிள்ளைகள் தாய் தந்தையின் ஈடேற்றத்துக்காக அல்லாஹுதஆலாவினிடம் பிரார்த்தனைப் புரிவராயின் அந்த ‘துஆ’ தடையின்றி ஏற்றுக்கொள்ளப்படுகின்றது.

(4) நபிகள் நாயகம் ரஸூல் (ஸல்.) அவர்கள் குழந்தைகள்மீது அதிக அன்பும், வாஞ்

சையும் உடையவர்களாயிருந்தனர். பெண் குழந்தைகளை பண்டைக்கால மூர்க்க அராபியர்கள் வதைத்துப் புதைத்து வந்தமையால், அக்கெட்ட நடத்தைகளை நபிகள் நாயகம் (ஸல்.) ஒழித்து "நல்லாசாரத்தை நிறுவச் செய்து பிள்ளைகளை க்ஷேமமாய் வளர்த்து பெரியவர்களாக்கி உம்மத்தை விருத்திச் செய்யுங்கள். இவை உங்களுக்கு சுவர்க்க பதவியை யளிக்க அனுகூலமாயிருக்கு"மென உபதேசித்துள்ளார்கள்.

## பாபத்தைவிட்டுப் பரிசுத்தம் பெறல்

நிகாஹ்வின் பிரதம பயன்களில் மனித வாழ்க்கை, காமாந்தகார உணர்ச்சி இவைகளால் ஏற்படும் பாபக் காரியங்களையகற்றிப் பரிசுத்தம் பெறுவதாகும். விவாகத்தை வெறுத்து பிரமச்சரியம் கொள்வதென்பது நமது இஸ்லாத்தில் கூடாது. விவாகம் புரிந்துக்கொண்டு இல்லற தர்மத்தோடு, மனைவியும் புருஷனும் மனமும் இனமும் ஒருமித்து சீரியராய் வாழ்வதே நல்லாசாரமாகும். விவாக பாக்கியம் பெறுதோரிலனேகர் காம உணர்ச்சியால் மதிகெட்டவர்களாய் லோபிகளாய், உலுத்தர்களாய், கேடுகெட்டலைகின்றனரன்றோ? என்னே மதியீனம்! ஆண்டவன் நம் மானிட கோடிகட்கு இயற்கையாயளித்துள்ள இன்ப பாக்கியத்தை இன்னோர் இழந்து பாபக் கிருத்தியங்களில் மூழ்கின்றமை எற்றுக்கோ? விவாகம் இறைவனது அருட்பேறுகளிலொன்றாகும்.

## சந்தோஷ சாதனம் பெறல்

"உலகப் பொருட்களில் மூன்றே எனக்கு மனச் சந்தோஷந் தரக்கூடியவைகளாகும். அவை நறுமணம், பெண்மணி, தொழுகையில் கண்குளிர்ச்சி இவை." என்று நபிகள் நாயகம் (ஸல்.) கூறியிருக்கின்றனர். இதில் ஆழ்ந்த கருத்துக்கள் உள.

விவாக வாழ்க்கையினால் உண்டாகும் ஹிருதய குதூகல சந்தோஷம் உலகத்தின் வேறெப்பொருளிலுமில்லை. மேற்படி நாயக வாக்கியத்தில் மிளிரும் முவ்வகை சந்தோஷங்களில் "தொழுகையில் தோன்றும் நேத்திரக் குளிர்ச்சி" என்பது ஆன்மார்த்த சம்பந்தமான தெய்வீக இன்பமாகும். உள்ளச் சப்பாட்டோடு பக்திப்பூர்வமாய் தொழுகும் எவரும் இவ்வின்பத்தை அனுபவித்தல் சாலும். நறுமண இன்பம், பெண்மை யின்பம் ஆகிய இரண்டும் தேகப் புலன் சம்பந்தமான இன்பங்களாகும். இவ்விரண்டையும் எல்லோரும் சர்வ சாதாரணமாய் நுகரலாம். இன்பம் நுகர்தல் மட்டும் ஒழுக்கமாகாது. இப்பாக்கியத்தை இறைவன் நமக்கருளி யமைக்கு அல்லாஹ் தஆலாவை மனமார நாவாரத் துதித்து ஜபிக்கவேண்டும்.

மேலும் ஹஜ்ரத் உமர் (ரலி.) அவர்கள் கூறி இருப்பதாவது:—"ஜபிக்கும் (திக்று செய்யும்) நாவையும், நன்றிபாராட்டும் (ஷுக்ரு செய்யும்) ஹிருதயத்தையும், பணிந்து நடக்கும் மூமினாவாகிய மனைவியையும் நீங்கள் ஒவ்வொருவரும் பெற்றுக் கொள்வீர்களாக."

## குடும்ப சவுகரியம்

ஓர் ஆடவன்தானே சம்பாதித்து தானே சமைத்து சாப்பிட்டு மற்ற உலக வியவகாரங்களையும் கவனிப்பதென்பது சிரமசாத்திய மாகும். ஆகவே விவாகஞ்செய்து மனைவி யுடன் குடும்ப வாழ்க்கை கொள்வதெனின் எல்லாவித சவுகரியங்களுமுண்டு. சமைத்தல், வீட்டுச் சாமான்களைப் பாதுகாத்தல், குழந்தைகளை சம்ரக்ஷித்து நற்குண நல்லொழுக்கம் புகட்டல், விருத்தராகிய பெற்றோர்க்கு பணிவிடைப் புரிதல் ஆகிய காரியங்களையெல்லாம் நல் மனைவியானவள் கவனித்துக் கொள்ளுவள். ஆடவன் சுகமே தன் உலக விவகாரத்தை மட்டும் கவனித்துக்கொண்டு வீட்டுக்கு வந்து மனைவியின் புன்முறுவல் பூத்த வதனத்தைக் கண்டு களித்துத் தன் ஆயாசந் தீர்ந்து சர்வபோக பாக்கியங்களையும் மனுபவிக்கலாம்.

இவை மட்டுமல்லாமல் உத்தம மனைவியானவள் புருஷனுக்கு சன்மார்க்கத் துணையிலும் பெரும் பயன்படுகின்றாள். சத்திய மனைவி தன் புருஷனுக்கு நற்குண நல்லனுஷ்டானங்கள் எடுத்தோதிச் சீர்திருத்துவாள். இதமான வசனங்களைப் புகட்டி தன் பதியை பாப காரியங்களை விட்டும் பாதுகாப்பாள். இதையொட்டியே ஹஜ்ரத் உமர் (ரலி.) அவர்கள், "ஆண்டவனால் அருளப்பெற்ற பாக்கியங்களில் ஈமானுக்குப் பிறகு சத்திய உத்தமியான மனைவியை அடைவதைவிட சிறந்த வேறொன்றுமில்லை"யென்று கூறியுள்ளார்கள்.

## மனைவி மக்களை ஆதரிப்பதின் புண்ணியம்

தன் வாழ்க்கைத் துணைவியான மனையாட்டியையும், தன் வாழ்க்கைக் குதூகலத்தையும், ஆனந்தப் பரவசத்தையும் நல்கும் இளஞ் சிறுக் குழந்தைகளையும் ஆதரித்து சம்ரக்ஷிப்பதும், இஸ்லாமிய ஆசாரத்தில் சீர்திருத்தி நற்குண நல்லொழுக்கத்துக்குக் கொண்டுவரலும், அவர்களின் துர்க்குணத்துக்கோ, பிடிவாத மூர்க்கத்துக்கோ பொறுத்து "ஸப்ரு" செய்வதும் எத்துணைப்பெரிய புண்ணியமும் நன்மையும் என்பதை விளக்கவும் வேண்டுமோ?

"மனைவி மக்களுக்கு ஆகாராதிகள் (நபகா) அளிப்பது ஸத்காவை (தருமத்தை) விட சிறந்ததாகும்" என்று ஹதீதிலும் சிலாகிக்கப்பட்டுள்ளது. "மனைவி மக்களுக்களிக்கவும், தான் அனுபவிக்கவுமென்று ஒருவன் பாடுபட்டு ஹலாலான வழியில் சம்பாத்தியம் புரிவானாயின் இன்னவனுக்கு அல்லாஹ்வுடைய வழியில் "ஜிஹாத்" புரிவதைவிட அதிகமான புண்ணியமிருக்கிறது" என்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

மனைவி மக்களுள்ளவன் இன்னோரை ஹலாலான ஜீவனத்தைகொண்டு ஆதரிப்பதினாலும், குழந்தைகட்கு உணவு உடையளித்து கல்வி கற்பித்துவைப்பது கொண்டும் "கஜ்வா" (மதப்போர்) வில் கலந்து ஜிஹாத் புரிந்த நன்மையைவிட அதிகம் பெறுகிறான்" என்று இப்னுல்முபாரக் என்னும் மஹான் கூறியுள்ளார்கள். இவ்வாறே மற்றும் அநேக மகான்களும், பெரியோர்களும் இல்லற வாழ்க்கையின் மேன்மையினை சிலாகித்துக் கூறிப் போந்தார்கள். ஆகவே இவ்வுத்தமிகளை, விவாகம் செய்து கொண்டு மனைவியை ஆதரித்து, குழந்தைகளைப் பெற்று ஆனந்தமடைந்து அல்லாஹ், ரஸூல் கட்டளைகளையும் உபதேசங்களையும் பெற்றுய்வது எம்மட்டும் மேலான காரியமென்பதை நம் முஸ்லிம்கள் உணராமலிரார். இதையொட்டியே "இல்லறத்திற் சிறந்ததொரு நல்லறமில்லை" என்றும், "இல்லகத்திருக்க இல்லாததொன்றில்லை"யென்றும் அறிஞர்கள் கூறிச்சென்றுள்ளார்கள்.

## இல்லறம்

விவாகப் பந்தனைக்குப்பின் இல்லறத்துறையில் ஆடவரும் பெண்டிரும் அனுஷ்டிக்க வேண்டிய கடமைகள் இன்னும் பலவுள. முதலாவதாக மனைவியும்புருஷனும் மனமொத்து இனமொத்து பரஸ்பர அன்புடன் ஒருமித்து வாழவேண்டும். புருஷனோ மனைவியோ பிறிதொருவரின் கோபத்தையோ அதிருப்தியையோ தூண்டிவிடக் கூடிய விபரீதக் காரியத்தைச் செய்யாதிருத்தல் வேண்டும். புருஷன் மூர்க்கனாகவோ, துஷ்டனாகவோ இருப்பானாயின் உத்தம மனைவியானவள் பதிபக்திக் கடமையை யனுசரித்து பொறுமையே பூஷணமாய் சாந்தமே உருவாய் நின்று ஒத்து ஒருமித்து இதமாய் நடந்துகொள்ளல் வேண்டும். பதியின் முன் இல்லாள் என்றும் எப்போதும் மலர்ந்த செவ்வதனம் பூத்தே மகிழ்வுடன் இலகல் வேண்டும். புருடன் சந்தோஷமாயிருக்குஞ் சமயத்தில், தனக்குள் எத்துணைக் கஷ்டமும் சஞ்சலமும் இருந்தபோதிலும் வெளிக்குக் காட்டாது மறைத்து மணாளனுடன் மருவி மகிழ்வுடன் குலாவ வேண்டும். புருடன் சஞ்சலத்தாலோ, வீட்டுத்தொல்லையின் கஷ்டத்தாலோ வருந்துங்கால் அன்னவன்முன் கடுகடுத்த முகத்துடன் கணமுமிருத்தலாகாது. குடும்பச் சிலவு சாமான்களுக்காக புருஷனை வாட்டி மனமொடியச் செய்யும் கொடு நீலியினும் பேய் பிசாசுகள் கொடியவை யன்றே.

இவ்வாறே புருஷனும் மனைவியின்பால் பரஸ்பர அன்புடன் ஒழுகிக்கொள்ளல் வேண்டும். மனைவியை எக்காரணத்தைக் கொண்டும் தூஷித்தலோ, புடைத்தலோ, வதைத்தலோ கூடாது. மனைவியினால் உண்மையில் ஏதேனும் தவறுதல் நேரிட்டு விடுமாயின் கோபத்தை யடக்கிக்கொண்டு இதமான முறையில் நீதி போதித்து புத்திப் புகட்டல் வேண்டும். கண்டித்துக் கோபித்துக்கொண்டால் நல்ல மனைவியும் கெட்டவளாய் விடுகிறாள் என்று அனுபவசாலிகளான பெரியார்கள் கூறியுள்ளனர். ஆகவே புருஷனும் மனைவியும் பூவும் மணமும்போல் ஒத்து வாழ்வதே இல்லறமெனும் நல்லறமாம்.

லோக தயாளர் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் பெண்கள்பால் எப்போதும் மிக்க ஆதரவாகவும், அன்பாகவும் நடந்துகொள்வார்கள். பெண்கள் தவறிழைத்தாலும் கோபித்துக்கொள்ளார்கள். தமது மனைவிமார்களுடன் குதூகலமாகவும் பரஸ்பரமாகவும் சொற்ப காலம் விளையாடவும் இருந்த

தோடு பெண்களை வரம்பைக்கடந்து மீறவிடா மலும் காப்பார்கள் எம்பெருமானுர் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் தமது இளமை-உத் தம மனைவி ஆயிஷா நாயகியுடன் பரஸ்பரம் விளையாடியுள்ளார்கள். ஒருமுறை நாயகமும் ஆயிஷா நாயகியும் சாதாரண ஷரத்தின்மீது ஓடினர். முதன்முறை நாயகம் (ஸல்.) அவர்களே இந்த ஷரத்தில் - ஓட்டத்தில் முந்திக் கொண்டார்கள். மற்ருெரு முறையும் ஓடியதில் நாயகமவர்கள் நாயகியவர்களை முன்னுக்கு ஓடவிட்டு மனங்களிக்கச் செய்தார்கள்.

எனவே, ஆடவர்கள் இல்லற வாழ்க்கையில் மனைவி யருடன் சரசமாய் நடந்துகொள்வரேல், மனைவியர் மணளருடன் உயிருக்குயிராய் நடந்துகொள்வர். அன்புக்கு அன்பு செய்யாதார் யாரே உளர்? மேலும் இத்தகைய குதூகல வாழ்க்கை தேகாரோக்கியத்தையும், உடலோம்பலையும் நல்கும்.

“உங்களில் தங்கள் மனைவி மக்களுக்கு உவந்தவர்களா யிருக்கின்றவர் யாரோ அன்னவரே எனக்கும் உவந்தவர்களாவர்” என்று நபிகள் நாயகம் (ஸல்.) கூறியுள்ளார்கள். எனவே முஸ்லிம் சகோதர சகோதரிகாள்! ஈண்டெடுத்தோதப்பட்ட இல்லற ஒழுக்க தர்மங்களின்படி நடந்து உலகத்தில் குதூகலமும், பரலோகத்தில் இறைவனரு ளும், சுவனபேரின்பமும் பெற்றுய்வீர்களாக.

வஸ்ஸலாம்

---



## ஸுன்னத்து வல்ஜமாஅத்துக் கொள்கை

சிங்கை ஜனுப் முஹம்மது ஷரீப் சாஹிப் வரைவது

சகோதரர்காள்! தா. இ. பத்திராதிபர்களாய தாவூதிய பாகவிகள் தங்களது பத்திரிகையாம் தா. இ. வில் சாமான்ய மக்களை ஏமாற்றும் பொருட்டு:—

“எடுத்ததெர்க்கெல்லாம் ஸுன்னத்துவல் ஜமாஅத்து போய்விட்டதென ஓலமிடுவர் ஒரு சிலர். ஆனல், அந்த சுன்னத்து வல்ஜமா அத்தின் கொள்கைகள் தாம் யாவை யெனின், பதில் மொழி கூருது மௌனம் சாதிப்பர் ஆயினும் சுன்னத் வல்ஜமாஅத் போய்விட்டது; சுன்னத் வல்ஜமாஅத் போய்விட்டதென்னும் ஓலத்தைமட்டும் ஒருக்காலும் ஒழியார். யுவர்காள்! இந்தகைய சுன்னத் வல் ஜமாஅத் பாதுகாவலரைக்கண்டு ஏமாந்து போகாதீர்கள்? காலம் கலிகாலம்! எடுத்ததற்கெல்லாம் ஈமான் போய்விட்டதென்பர்!,,

இதுபோலொத்த அநேக வியாசங்களை தமது பத்திரிகையில் முறையே பிரசுரித்து நமது தென்னிந்திய சகோதரர்களான, சில இளங்காளையர்களைத் தமது தீயபிரசாரத்தின் பக்கல் இழுத்து அன்னவர்களின் ஈமானைப் பறிகொடுத்து தவிக்கும்படி செய்துவிட்டதுமன்றி பிறரையும் சன்மார்க்கவழி செல்லாது தடுக்க முற்படும்படி செய்து விட்டனர், ஆதலின், அந்த ஸுன்னத்வல் ஜமாஅத்தின் கொள்கைகளை சரியான மார்க்கக் கிரந்தங்களின் ஆதாரத்தின் மூலம் மேன்மை பொருந்திய அல்லா மாக்களால் வெளியிடப்பட்டிருப்பதை பா. தா. பாகவியும், அவர்களது சிஷ்யர்களான தாவூதிய கோஷ்டியினர்களும் உணரும் பொருட்டு விவரிக்கின்றேன். அஃதாவது:—

நமது உண்மைத் திருதூதர் நபிகள்நாயகம் (ஸல்.) அவர்களின் தீர்க்கத் தரிசன திருவருள்வாய்மையில் “எனது சமூகத்தினர் (73) பிரிவின ராவர் அவர்களில் ஒரு கூட்டத்தினர் தவிர மீத முண்டாய 72 கூட்டத்தினரும் நரகமடைவர். (அல்லது) எல்லோருமே நரகத்திலாவர். எனினும் யானும் எனது சகாக்களாகிய சஹாபாக்களு மிருக்கும் நன்னெறியைத் தொடர்ந் தொழுகும் (ஸவாத்துல் அஃலம்) வலுப்பமான ஒரு கூட்டத்தை தவிர்த்து” இவர்களே உண்மையான சுன்னத்துவல் ஜமா அத்து முஸ்லிம்களாகிய ஈடேற்றம் பெற்ற நல்ல அதிர்ஷ்டம் வாய்ந்தவர்கள்.

ஆகவே நம்உண்மை ஸுன்னத்துவல் ஜமா அத்துகளாகிய ஸத்தியவே தபாரகரும், ஸ



ர்க்க வழி காட்டிகளுமான ஸஹாபா தாபின், தப அத்தாபி ஈன், ஸலபுஸ்ஸாலிஹீன், களும், நான்கு முத்ஹபின் முஜ்தஹித்களான இமாம்களும், உலமாக்களும் மற்றும் முஸ்லிம்களெல்லோரும் ஏக போகமா யொருமித்து அனுஷ்டித்து வரும் சித்தாந்தப்படி ங்கள் ஸுன்னத்துவல் ஜமாஅத்தார்களது மானின் (அகீதா) உறுதியானது நம் அரிய பெரிய நாயகன் அல்லா ஹுத் தஆலாவேயன்றி வணங்கத்தகுமான நாயன் யாருமில்லை. அவன்ஏகன், தனித்தவன். அவனது (தாத்து)சூட்சமத்திலோ (ஸிபாத்து) இலட்சணங்களிலோ இணை, துணை, உதவி ஒத்தாசை, மாதா, பிதா, மனைவி, மக்கள், பிறப்பு, இறப்புயாதொன்றுமில்லை. அவனன்றி யாதொரு(மக்லூக்) சிருஷ்டிக்கும் (ஸுஜூது) பாதத்து சாஷ்டாங்கம், வணக்கம் புரிதல் குபிரும் ஷிர்க்கு மான கூடாக் கருமமாகும். யாதொரு(ஹாஜத்து மக்ஸூது)இகபர சுதுக்கத்தின் நாட்டமோ தேட்டமோ மோட்சமோ அவனிடத்திலே யன்றி வேறில்லை. அவனே உயிர்ப்பிப்பவன், உணவளிப்பவன், மரணிக்கச் செய்பவன், மரணத்திலிருந்து மீட்பவன், மறைவான ஒளிவான சகல காரியாதிகளையும் நன்கறிந்தவன்;(கியாமத்து) மறுமை நாளில் அரசுரிமையிலும் நியாயத் தீர்ப்பிலும் நன்மை தீமை நரக சுவர்க்கமளிப்பதிலும், பாவதோஷ மன்னிப்புத் தண்டனையிலும் சர்வ சுதந்தரமும் இச்சையும் சகல தத்துவாதிகாரமும் அவனுக்கே யன்றி வேறில்லை, அவன் நாடியதைச் செய்வான்; வேண்டியதை முடிப்பான்; அவனது சொல் செயலில் கேட்பானே, கொடுத்ததை தடுப்பானே தடுத்ததை கொடுப்பானே தீர்த்ததை மாற்றுவானே, விதித்ததை மறுப்பானே எவனுமில்லை.

அவனே உண்மையான(உஜூது), உள்ளமையுடையான். உள்ளமையோ அவனது(தாத்து) க்ஷுமத்திற்கு விதியாகவும், இல்லாமையில ாகவுமிருக்கின்றன. அவனது உள்ளமையிலே சகல உலகமும் இல்லாமையிலிருந்து உண்டாக்கப்பட்டன. அவன் (கதீம்) பூர்வீகமுடையான், தரிபாடானவன், நித்தியன், அவனுக்கு அழிவில்லை. உலகமானது புதிதாக ஆவதிலும், அழிவதிலும், நிலைத்திருப்பதிலும் மற்றும் தனது ஆசாபாசங்களிலும் அவனது சகாயாதரவை எதிர்நோக்கி இருப்பதே யன்றி அவன் ஒருவரிலும் யாதொரு தேவையுமற்று தன்னால் தானும், தன்னிலையால் மற்றவையும், தன்னிலே தானுய் தனக்குள்ளே சர்வமுமாய் நின்று சகல ஜீவராசிகளின் உயிருக்குடல் போன்றும் உடலுக்குயிர்போன்றும் அகிலாண்ட புவனசரா சரங்களனைத்தையும் ஆக்கியழித்து காத்திரட்சித்தாளுபவன், சகல மேன்மையான, தூய்மையான, வலுப்பமான, பரிபூரணமான திருநாமங்களும் இலக்ஷணங்களும் அவனுக்கே உரியன. அவனது காரிய கருமங்களில் யாதொரு குற்றமோ, குறைவோ, பிசகோ, பிழையோ, கிடையவே கிடையா; இன்னும் அவன் (ஆலிம்) அறிவுடையான்; யாதொரு பெரிய சிறிய வஸ்துவும் அவனது அறிவிலிருந்து தப்புவதில்லை; (காதிர்) மகா பாரசக்தியுடையான். யாதொரு(மும்கினுத்து) சாத்தியமான சாதனங்களில் யாதொன்றும் அவனது தத்துவத்திற்கு புறம்பானதல்ல. (ஹய்யுன் - ஸமீஉன்- பஸீருன்) ஹயாத்துடையான்; அவனுக்கு மவுத்தில்லை. கேள்வி பார்வையுடையான். அவனது பார்வை கேள்வியிலிருந்து ஆர்ப்பளவும் மறைவதில்லை.

இன்னுமவன் (ஜவ்ஹர்) ஆதாரமற்ற அணுவுமல்லன், (அற்லு); ஆதாரமுள்ள பண்புமல்லன்; (ஜிஸ்மு) சரீரம், அல்லது தேகமுமல்லன்; ஆடல், அசைதல், ஒன்றித்தல், பிரிதல், ஏறுதல், இறங்குதல், பொழிதல், அமைதல், தங்குதல், திரிதல் முதலிய படைப்புகளுக்குரிய குறைவான, இழிவான, பண்புகளோ, இலட்சணங்களோ யாதொன்றுமின்றி பேதா பேதமற்ற பரிசுத்தமானவன்.

இன்னும் அல்லாஹு ஸுபுஹானஹு தஆலா வானவன் (கியாமத்) மறுமைநாளில் மூமினுனவர்களின் வெளிக்கண்களால்காணப்படுகிறவன். அவனது அடியார் விஷயத்தில் கருணைக்காட்டலும் தக்கனசெய்தலும் அவன்மீது விதியல்ல எனினும் அவன் அவர்களின் நன்மைக்கு நற்கூலி கொடுத்தல் அவனது இலவச வரிசையினுலும், தீமைக்கு வேதனைசெய்தல் அவனது நீதிநெறியினுலுமாம். அவனது செயலிலும், தீர்ப்பிலும் நியாயதர்மத்திலும் யாதொரு அநீதியோ, அநியாயமோ சாற்றிக் கூறுவதற்கில்லை. “அவன் நாடியதைச் செய்வான், வேண்டியதைமுடிப்பான்” (குர்ஆன்).

எனவே அடியாரின் நற்கிரியைக்கு நற்கூலியும், துராகிருதத்திற்கு தண்டனையும் கொடுப்பது அவன்பேரில் கடமையில்லை. இன்னும் அடியாரின் புத்தி விவேகத்திற்கோ, யுக்தி யூகத்திற்கோ யாதொரு சொல் செயல் கருமங்களின் நன்மையையோ தீமையையோ, நன்மை தீமைகளையோ, தங்கள் சுயேச்சையினால் மனோரதப்படி நிச்சயித்துக் கூறுதல் கூடவே கூடாது.

ஆனால் ஷரஉஷரீபுக்கே நன்மை தீமைகளையும், ஹலால் ஹறும்களையும் வரையறுத்துத் தீர்மானித்துக் கூறுதற்குரிய முழு பாத்தியதையும், சகலசுதந்திரமு முண்டு. இன்னும் அல்லாஹு ஸுபுஹானஹு வத ஆலாவுக்கு அனேக (மலாயிகத்து) தேவ தூதர்களான அமரர்களுளர்; அவர்களின் எண்ணிக்கையை அவனன்றி யாருமறியார்; அவர்கள் ஆணென்றும், பெண்ணென்றும், பேடியென்றுமில்லை; அவர்கட்கு ஊண் குடிப்பு உறக்கம் மயக்கம் இச்சை யாதொன்றுமில்லை; அவர்களின் உணவு ஆகாரமெல்லாம் அல்லாஹுத் தஆலாவை (தஸ்பீஹ் - தஹ்லீல்-தக்பீர்) துய்தாக்கல், வலுப்பமாக்கல், (திக்ரு-ஸலவாத்து- இஸ்திக்பாரு) அவனை ஸ்தோத்தரித்தல், நபியவர்கள்மீது ஸலவாத்து ஓதல், மூமின்களுக்காக பிழை பொறுக்கத் தேடுதலேயாம். அவர்கள் அல்லாஹுத் தஆலாவின் ஏவலுக்கு மாறு செய்யாமல் அவனது கட்டளைக்குட்பட்டு சதாவழிப்பாட்டிலேயே தரிபட்டு பாப தோஷங்களைவிட்டும் காக்கப்பட்ட பரிசுத்தவான்கள். அவர்களில் மிகவும் வரிசையான தலைவர்கள் (ஜிப்ராயீல்-மீக்காயீல்-இஸ்ராபீல்-இஸ்ராயீல், (அலை.) இந்நால்வருமாம். அவர்கட்கு அல்லாஹு தஆலாவினிடத்தில் தங்கள் தாராதரப்படி ஒவ்வொரு தானமும், பதவியும் நியமிக்கப்பட்டிருக்கிறது.

"கிதாபுகள்" அல்லாஹுத் தஆலாவினால் அவனது அன்பியாக்கள் (அலை.) மீதுவானத்தில் நின்று இறக்கப்பட்ட வேதங்கள் நான்கு. (ஸுஹ்பு)கள் நூறு. அவைகளில் தவ்றாத்து - மூசா நபி (அலை.)க்கும், ஜபூர் தாவூது நபி (அலை.)க்கும், இன்ஜீல்-ஈஸா நபி (அலை.)க்கும், புர்கான்-நமது நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களுக்குமாம். குர்ஆனது அல்லாஹுத் தஆலாவின் திருவசனமும் சிருஷ்டிக்கப்படாத பூர்வீகமானதுமாம்.

இன்னுமது முஸ்ஹபுகளில் எழுதப்பட்டதும், நாவினால் ஓதப்பட்டதும், மனதுகளில் பாடம் செய்யப்பட்டதுமாய் இருப்பினும் அல்லாஹு தஆலாவின் தாத்திலே த[...] பாடாயும்; அதை விட்டுப் பிரிந்து முஸ்ஹ[...] நாவு மனதுகளில் இறங்கி விடுதியிடாதத[...]யும், பரிசுத்தமாக்கப்பட்டதுமா யிருப்[...]துடன் மற்ற மூன்றும் (மன்ஸூகு) மாற்ற[...] பட்டுப் போயினும் குர்ஆன் மாற்றப்படாம[...] சதா நிலையமாய் கியாமநாள் பரியந்தம் நட[...] தேறி வருவதுமாயிருக்கும்.

"நபிமார்கள் (அலை.)" இன்னும் அல்ல[...]ஹுத் தஆலாவினால் அவனது அடியார்க[...] நல்வழி படுத்தும் பொருட்டு அனுப்பிவை[...]கப்பட்ட அன்பியா (அலை.)தீர்க்கத் தரிசிக[...] ஆதம்நபி (அலை.) உள்பட ஓரிலட்சத்து இ[...] பத்து நான்காயிரமாவர். அவர்களில் மு[...]னூற்றுப் பதிமூன்று முர்ஸலீன் (அலை)களு[...] ஆறு (உலுல் அஸ்ம்) நற்கருத்துடைய [...]லான வரிசையான நபிமார்களாய ஆத[...] நூஹு - இப்றுஹீம் - மூஸா - ஈஸா-(அ[...] முஹம்மது (ஸல்.) அவர்களு முளர். [...] திருநபிகள் நாயகம் முஹம்மது (ஸல்.) அ[...] களே எல்லோரினும் (அப்ஜல்) மிக்க வரி[...]யும், (அஷ்ரப்) மஹா சிறப்பு வாய்ந்தவ[...]ளும், காத்திமுல் அன்பியாய்வல் முற்ஸலீ[...] (அலை.) சகல நபிமார், றசூல் மாரி[...] கடைசியான, முத்ராங்கமான வர்களு[...]யிருக்கும். அவர்கட்குப்பின் யாதொரு [...]யோ, றசூலோ கியாம நாள்வரை வரப்[...]கிற தில்லை.

(தொடரும்)

---

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரையும் தன் சகோதரனாகப் [...]வித்து தன் உடல், பொருள், ஆவி ஆகிய இம் மூன்றையும் அந்நோர்[...] தியாகஞ் செய்து மானிடவர்க்கத்தினர்க்கு உதவிபுரிபவனே சாலச் சிற[...]வனாகும்.

# ஜிஹாங்கீரின் செங்கோன் முறை

[...]முகல்வர்க்க மாகூஷிமிக்க மன்னராய ஸுல்[...]ன் ஜிஹாங்கீர் அவர்கள், அறநெறி வழு[...]து அரசுபுரியும் தயாநிதியாகவும், குடிமக்[...] நலனே தன்னலனென கொள்ளும் கா[...]ண்ணிய ராகவும் விளங்கினர். அதற்கேற்ப [...]வரதுபட்ட மகிஷியான மாது சிரோன்மணி [...]லகஜோதி நூர்ஜஹான் பேகமும் அன்பின் [...]ருவாயும் கருணையின் காரிகையாகவும் [...]கழ்ந்தார். எளியோராயினும் வலியோரா[...]னும், பிரதானிகளாயினும், பிரஜைகளாயி[...]ம் யாவர்பாலும் ஒரேவிதமான நீதிநெறி[...]ன் செங்கோல் நடாத்தி வந்தனர். இவர்[...]ம் செங்கோன்முறையை நன்கு விளக்கும் [...]தையொன்றை ஈண்டு நம் நேயர்களின் பார்[...]வைக்குப் பிரசுரிக்கின்றேம் :—

ஜிஹாங்கீர் பாஷாவின் மாளிகையின் வெ[...]ப்புறத்தி லோரிடத்தில் சங்கிலி யொன்று [...]தாங்கிக் கொண்டிருக்கும். நீதி விசாரணை [...]ரும்புவோர் அரசரைக்கண்டு பேசவிரும்பு[...]வார் - தங்கள் குறைகளை முறையிட்டுக் [...]காள்வோர் ஆகியோர் தங்கள் வருகையை [...]ரசருக்கு நேரே தெரிவித்துக்கொள்வதற்[...]க இச்சங்கிலி அமைக்கப் பட்டதாகும். [...]ந்து ஜிஹாங்கீர் பாஷாவின் பிரத்தியேக [...]றையிலுள்ள மணியுடன் பிணைக்கப்பட்[...]ருக்கும். சங்கிலியை அசைத்தவுடன், அர[...] எழுந்துவந்து விசாரித்து தக்க பரிகாரஞ் [...]ய்தல் ஜிஹாங்கீரின் வழக்கமா யிருந்து [...]த்தது.

[...]ஒருநாள் ஒரு முதியவரும் முதியவளும் [...]ல்தானுடைய அரண்மனையை அணுகி சங்[...]லியை அசைத்தனர். இவ்விரு தம்பதிய[...] கண்ணீரும் கம்பலையுமாய்த் துக்கத்தால் [...]வாடி முக்கியமான குறையொன்றைப் [...]றி மன்னர் பிரானிடம் முறையிட்டுக் [...]கொள்ள வந்தவராவர். சங்கிலியின் அசை[...]ல் மணியோசைகேட்ட நீதிமான்நல்லரசர் [...]ல்தான் ஜிஹாங்கீரவர்கள், சங்கிலி [...]யசைத்தோரை தஞ் சமுகத்துக்கு அழைத்து [...]ருமாறு சேவகரை யனுப்ப, சேவகர்களும் [...]வ்விரு முதிய தம்பதிகளை கண்ணியத்துடன் அழைத்துகொண்டுபோய் சுல்தானின் திருச்சமுகத்தில் உடனே சேர்த்தனர்.

ஜிஹாங்கீர் மன்னர் அவ்விரு தம்பதியரை இனிது உபசரித்து, நீங்கள் வந்துற்றதன் காரண மென்ன? உங்கள் குறை யாதெனத் தயங்காது எடுத்துரைப் பீர்களாக என அன்புடன் மொழிந்தார். அதற்கு அத்தம்பதிகள் பின்வருமாறு கூறினர் :—

"நெறிமுறை வழுவாநீதி வேந்தே! நாங்கள் தங்களது லாஹூரின் ஏழைக்குடிகள். யாங்கள் மணம்புரிந்துகொண்டும், பல்லாண்டுகள் வரை புத்திரப் பேறில்லாமல் மனங்குழைந்து கொண்டிருந்தோம். இறுதியில் எங்களது முதுமை காலத்தில் இறைவனது அருளாலும், ஒருபெரியாரினது துஆப் பரக்கத்தாலும் அழகிய ஆண்மகவொன்று எங்கட்குப் பிறந்தது. அரிதரிதாய்ப் பிள்ளைப் பிறந்தால் ஏழையும் ஆனந்தமேலீட்டால் பூரித்து தன் வீட்டில் பந்து ஜனங்களைக்கூட்டி ஒரு தினமேனும் விருந்தோம்பி கொண்டாடுவா னன்றோ? அவ்வாறே யாங்கள் சென்ற இரவு எம் இல்லத்து பந்து மித்திரரை வரவழைத்து விருந்தளித்து அக் குழந்தைக்கு ஆடையாபரண மணிவித்து அன்புடன் கொண்டாடினோம். இச் சந்தோஷத்தால் எங்கள் வீட்டில் அன்றிரவு பேராரவாரமும், இனியபாட்டுகளும், சங்கீதக் கோஷமும் ஒலித்துக்கொண்டிருந்தன. இங்ஙனமிருக்க, எங்களது வீட்டை யடுத்திருந்த லாஹூர் ஸூபேதார் ஆலிப்ஜாஹுடைய அரண்மனையிலும் அன்றிரவு பேரார்பாட்டமும், பாட்டு நடனக் கச்சேரியும், கொண்டாட்டமும் இரவின் முன்னேரமெல்லாம் நடைபெற்றிருந்தன. இவை யாவும் முடிந்தும் எங்கள் வீட்டில் சந்தோஷக் கோஷம் ஒலித்துக்கொண்டேதானிருந்தது. நடு நிசிவரை ஆட்டபாட்ட ஆர்பாட்டத்திலிருந்து விட்டு தூங்கப்போன சுபேதார் ஆலிப்ஜாவுக்கு எங்கள் வீட்டுக் கொண்டாட்ட இரைச்சலால் நித்திரா பங்கம் ஏற்பட்டுவிட்டதாம். அரசே! எங்களால் ஏற்பட்ட சிறு குறை இதுதான். ஹா! என்

செய்வோம்? இவ்வற்பக்குறைக்காக யாங்கள் எங்களது அரும்பெருஞ் செல்வமாகிய அருமைக் குழந்தையைப் பறிகொடுத்தோம். எங்கள் உயிருக்குயிரான புத்திரனை இழந்தோம். பாவி அந்த ஸுபேதார் ஆலிப்ஜாஹ் எங்கள் குழந்தை பிறந்த கொண்டாட்டத்தினால் அவனது நித்திரைக்கு ஊறு ஏற்பட்டதென்று கொடிய சிப்பாய்களை அனுப்பி வயது தளர்ந்த எங்களையும் எமது அருமைக் குழந்தையையும் தன்னிடத்துக்குக்கொண்டு போனான். அந்தோ! எங்களை அன்னவன் கடிந்து அடாத சொற்களால் கண்டித்ததுமின்றி எங்கள் உயிரனைய அருமந்தக் குழந்தை பாலகன், பால் மண மாறாச்சிசு, உலகத்தில் ஜனித்து ஒரு குற்றமுமறியாப் பிள்ளையை கொஞ்சமும் இரக்கமில்லாமல் கன்மனம்பூண்ட காதகன் ஆலிப்ஸா கத்திக்கிரையாக்கினான். யாங்கள் எத்தனைக் கெஞ்சியும், வேண்டியும், அழுதும், புலம்பியும், அக்கன்மனப்பாதகன் சிறிதும் இரங்காது அப்பசுங் குழவியை கொன்றனனே! கோன்முறை பிறழாக் கொற்றவனே! குடிகட்கோர் தந்தையேயனைய கோவே!! சுபேதாரின் இவ்வதிக் கிரமத்தை விசாரிக்கத் தாங்களே எஞ்சியிருக்கிறீர். ஆண்டவனுக் கடுத்தபடியாய் எங்கள் குறைகளை கவனிக்க தாங்களே உள்ளீர்கள்" என்று கூறி இருதம்பதியரும் மாலை மாலையாய்க் கண்ணீர் உகுத்து நின்றனர்.

இப்பரிதாபகரமான வரலாற்றைச் செவியுற்ற கருணை மிக்க வேந்தர் சுல்தான் ஜிஹாங்கீரவர்கள் மிக வருந்தி தாமும் துக்கக் கண்ணீர் வடித்தனர். இவரது அருந்தித்துணைவியாய இராணி நூர்ஜஹானும் இவ்வரலாற்றை அரசரால் கூறக் கேட்டு மனங்கசிந்துருகி கண்ணீருகுத்தனர். பாதுஷா அவர்கள் சிறிது நேரம் ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தனர் இதை இராணிக்கும் தெரிவித்தனர். பின்னர் நீதி வேண்டிய தம்பதிகளை யழைத்து ஏதோ கூறி சாந்தப்படுத்தினர்.

இராஜாவும் இராணியும் தம் மந்திரிப் பிரதானிகள் புடைசூழ லாஹூருக்குப் புறப்பட சகல ஏற்பாடுகளுஞ்சித்தமாயின. முறையிட்டுக்கொண்ட முதிய தம்பதியரையும் அரசர் தம்முடன் அழைத்துக்கொண்டு லாஹூருக்குப் புறப்பட்டார்.

தன்னிருப்பிடமாகிய லாஹூருக்கே மாக்ஷி மிக்க சுல்தான் ஜிஹாங்கீரவர்கள் வருகின்றார் என்பதையுணர்ந்த நவாப் ஆலிப்ஜாவுக்கு உடல்நடுக்கம் ஏற்பட்டு விட்டது. குற்ற முள்ள நெஞ்சு குறுகுறுக்கு மன்றோ? அரசரை வரவொட்டாமற் றடுத்து விடுவதென்பது இந்த ஆலிப்ஜாவால் முடியுங் காரியமல்ல எனவே அவன் உள்ளொன்றுவைத்துப் புறமொன்று நடித்து அரசரை வரவேற்றுபசரிப்பதற்காக ஆடம்பரங்களைச் செய்யலானான். இவனது உபசரணை யொன்றையும் அரசர் முதலியோர் எதிர்பார்க்கவுமில்லை, அதை அனுபவிக்கவுமில்லை. சுல்தானவர்கள் லாஹூர் போய்ச் சேர்ந்ததும் லாஹூர் கோட்டையினுள் பிரத்தியேகமான தர்பாரொன்று கூட்டினர். இக் கொலுமன்றத்துக்கு பற்பல பிரதானிகளும், உத்தியோகஸ்தர்களும், முக்கிய கனவான்களும் விஜயஞ் செய்திருந்தனர், சுல்தான் ஜிஹாங்கீரும், இராணி நூர்ஜஹான் பேகமும் தமக்குரிய ஆசனத்தில் அயர்ந்திருந்தனர்.

இந்த தர்பாருக்கு ஆலிப்ஜாஹும் வராமலிருக்க முடியவில்லை. முதலில் தர்பார் வழக்கப்படி சுல்தானவர்கள் மந்திரி பிரதானிகள், சபையினர் யாவர்க்கும் வந்தனமளித்தனர். பின்னர் ஸுல்தானவர்கள் கூறிய தாவது :—

"மந்திரிகளே! சபையோரே! பிரதானிகளே! எல்லாம் வல்ல நம் இறைவன் நந்தேசமக்களின் நன்மை தீமைகளை கவனித்து குறைகளை விசாரித்து நீதி வழுவா தர்ம பரிபாலனஞ் செய்யும் அரசியற் பொறுப்பை என்பாலளித்துள்ளான். எனது பொறுப்பான இந்நிர்வாக நீதிபரிபாலன உதவிக்காக வேண்டி பிரதானிகளாய உங்களை என் துணைவர்களாக செய்து கொண்டுள்ளேன். ஆகவே என்மீதுள்ள பொறுப்பும், கடமையும் உங்கள் மீதுமிருக்கிறதென்பது திண்ணம். எனக்குள்ள சுகபோக பாக்கியத்தை கொண்டு யான் மனச் சந்தோஷம் ஒரு சிறிதுமடையேன். என் மக்கள் போன்ற குடி ஜனங்கள் யாதொரு குறைவின்றி குதூகலமாய் வாழ்வார்களாயின், அதுவே எனக்கு மாபெரும் பாக்கியமாகும். தன் சுகத்தையும் உயிரையும் அர்ப்பணஞ் செய்தேனும் குடிகட்கு சுகமளிக்க வேண்டுமென்பது அரசருடையவும் பிரதானிகளுடையவும் கடமையாகும். இக்கடமை நமது ஆலிப்ஜாமீதுமிருக்கிறதென்பதை அவர் மறுக்கமாட்டார். ஏனெனின். அவரும் என் போன்ற பொறுப்பும் பெருந்தன்மையும் வாய்ந்தவராயிருப்பாரென்று எண்ணுகின்றேன். 'அதிகாரியாயிருப்பவர் தனது பொருளையேனும் சுகத்தையேனும் உயிரையேனும் அர்ப்பணஞ் செய்தேனும் பொது ஜனங்கட்கு சுகமும் திருப்தியுமளியாதவரை உண்மை முஸ்லிமாகாரென்பது 'உண்மையல்லவா?' என யான் ஸுபேதார் ஆலிப்ஜாவை கேட்கின்றேன்.

அரசரின் போதனையையும் கேள்வியையும் உணர்ந்த ஆலிப்ஜா எழுந்து மிக வினயமாய் சுல்தான் ஜிஹாங்கீரை நோக்கி "அரசே! இவ்வெளியேன் தங்கள் மேன்மையான கட்டளைகளைச் சிரமேற்றாங்கி யொழுகச் சித்தமாயுள்ளேன். தாங்கள் கட்டளைப் பிறப்பிப்பீர்களாயின் குடிமக்களின் க்ஷேமத்துக்கும் நியாயத்துக்குமென யான் என் இன்னுயிரையும் அர்ப்பணஞ் செய்துவிட சித்தமாயுள்ளேன்."

எனலும், அரசர் ஜிஹாங்கீர் பொதுப்படையாய் கூறியதாவது :—அன்பரே! உமது பெருந்தாராள சிந்தைக்குச் சந்தோஷிக்கிறேன். நிற்க, தங்கள் சுகத்தையும் மதியாது எளிய பிரஜைகட்கு சுகமளித்தல் வேண்டுமென்பது அரசப் பிரதானிகள் கடமையன்றோ? இக்கடமையை எவரேனுமொரு அதிகாரி புறக்கணித்தது மல்லாமல், தன்னுடைய நித்திரா சுகத்துக்கு ஊறுவிளைகின்றதென்னும் அற்ப காரணத்தைக் கருதி குற்றமற்ற மழலைக் குழந்தையை வெட்டிக் கொலை செய்துவிடுவாராயின் அத்தகைய கொடிய அதிகாரிக்கு நீவிர் என்ன தண்டனை விதிக்க வேண்டுமென சம்மதிக்கின்றீர்?

அரசரின் வாயினின்று இவ்வுறுதி மொழியைக் கேள்வியுற்ற ஆலிப்ஜா பெரிதும் திக்பிரமையடைந்தான். இனி யாது செய்வதென தோன்றாது திகைத்தான். அரசருக்கு யாது மொழியால் பதிலளிப்பதென்று அவன் உள்ளத்திற் படவில்லை. தான் செய்த குற்றம் அரசரது செவிவரை எங்ஙனம், யாரால் எட்டியிருக்குமென அவன் பலவாறு சிந்தித்தான். இத்துணை மன, உடல், புத்தி பேதகத்தினால் அவன் சித்த சுவாதீன மற்ற பொய் சுவரே போல் நின்றான்.

மீண்டும் நீதி வேந்தர் சுல்தான் ஜிஹாங்கீரவர்கள் மந்திரி பிரதானிகளையும், கவர்னர் ஆலிப்ஜாவையும் நோக்கிக் கூறலானார் :— எனது பிரதானிகளே! ஒருவர் செய்துவிட்ட பாதகச் செயலை ஈண்டு யானே பகிரங்கப் படுத்தி அவருக்கு அபகீர்த்தியை யுண்டாக்க விரும்பவில்லை. "அல்லாஹு தஆலாவும் பிறர் குறைகளை மறைத்துவைக்கும் ஸத்தாருல் உயூப"க யிருக்கின்றான். ஆயினும் அவ்வாண்டவனே குற்றவாளிகட்குரிய தண்டனை விதிக்கின்றான். இவ்வாறே யானும் ஆண்டவனது திருவுளத்தைப் பின்பற்றி நடந்து கொள்ள வேண்டியவனாயுள்ளேன். நிற்க; எனது பிரதானிகளில் ஓரதிகாரி இங்ஙனம் சிசுவைத் தன் சுகத்துக்காகக் கொலை செய்வானாயின் அவனுக்கு என்ன தண்டனை விதிக்க வேண்டுமென்பதைப்பற்றி யான் இராணி நூர்ஜிஹானையும் கேட்டுக் கொள்ளுகிறேன்."

உடனே இராணி நூர்ஜிஹான் எழுந்து சபையினரை நோக்கி, "தன் சுகத்துக்காக சிசுவைக் கொலை செய்வதென்பது கொடிதினும் கொடிதாகும். இத்தகைய கொலைப் பாதகனுக்கு என்ன தண்டனை விதித்தபோதிலும் அது அற்பமேயாகும். இத்தகையவன் எனது சுற்றத்தானாயினும், உறவினனாயினும், நீதிபரிபாலன தருமத்துக்காக யானே அன்னவனுக்கு மரண தண்டனையை விதிக்கச் சிறிதும் பின்னடையேன். குற்றம் புரிந்தவர் யார்? குழந்தையை இழந்தவர்கள் யார்? என்பன இச்சபையினர்முன் பஹிரங்கமாதல் வேண்டும்." என்று கூறினர்.

பிறகு ஜிஹாங்கீர் மன்னர் எழுந்து "சபையோரே! பிரதானிகளே! இவ்விபரீதச் சம்பவத்தை யொட்டிய அத்தாக்ஷிகளை இஃதோ உங்கள் முன் தோற்றுவிக்கின்றேன்" என்று கூறி, திரை மறைவில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த கிழவரும், கிழவியும் வெளியில் வருமாறு கட்டளையிட்டனர். இருதம்பதிகளும் சபையின் முன் வெளிப்பட்டதும், இன்னோரைக் கண்ட ஆலிப்ஜா "இடியோசை கேட்ட நாகம்" போல் நடுநடுங்கி, உடல் குழைந்து, மனமொடிந்து, முகம் சோர்ந்தவனாயினன்.

அரசரின் கட்டளைப்படி அம்முதியவர் ஆலிப்ஜாப் புரிந்த அதிக்கிரமத்தையும், தன் குழந்தை கொல்லப்பட்ட சம்பவத்தையும்

மெய் சோர, நாவுலரத் தேம்பித் தேம்பி சபையினர் முன் எடுத்தோதி, நியாயம் கோரினர்.

ஆஸிப்ஜாவோ நடுக்கங்கொண்டவனுய், பயங்கொள்ளித்தனமாய் எங்கேனும் ஓடி ஒளியலாமென மனத்துள் எண்ணினனெனினும் அங்கிருந்து வெளியேறுவதென்பது முடியாததாயிருந்தது. எனவே அரசரது திருச்சமுகத்தில் முழந்தாளிட்டு "அரசரே! எனக்குயிர்ப்பிச்சை யளிக்கவேண்டும். யான் தெரியாது செய்த பிழையினை மன்னித்தருள வேண்டும்" எனப் பரிந்து வேண்டிக்கொண்டனன்.

ஆஸிப்ஜா, இராணி நூர்ஜிஹானின் உடன் பிறந்த சகோதரனுதலால் அவர், மேற்படிக் குற்றத்திற்காக மரணதண்டனை விதிக்கப்படுவது சரியல்லவென பிரதானிகள் பலர் அரசரை வேண்டி ஆஸிப்ஜாவுக்கு மன்னிப்புக் கோரினர். அரசரோ தற்போது செய்வது யாதென்று புலப்படாதவராய் வியாகூலமடைந்தார். "நியாயம் வேண்டுபவர்க்கும் நீதி வழங்கல்வேண்டும். குற்றமிழைத்தோர்க்குத் தண்டனை விதித்தல் வேண்டும்" என்னுங் கட்டளைப்படியே அவர் நடந்துகொள்ள வேண்டியவராயிருந்தார். எனவே மனத்தைத் தேற்றிக்கொண்டு, தன் இராணி நூர்ஜஹானை நோக்கி, "உத்தமி! குற்றத்தின் கொடுமையையும், முதியவர்களின் பரிதாபத்தையும், குழந்தை மாண்டகோரத்தையும், கொலைபுரிந்த பாதகத்தையும் நீயும் நல்லவிதமாய் இதுகாலை தெரிந்துகொண்டாய். மேலும் அவ்வித குற்றமிழைத்தவன் எப்படிப்பட்டவனுயினும் அவனை நீயே உன் கரத்தால் சிரச்சேதஞ் செய்வதாய்ப் பிரமாணஞ் செய்தனை. குற்றவாளியான ஆஸிப்ஜா உனது சகோதரரென்பது இப்போது பகிரங்கமாய் விட்டது. இனி நீ எவ்வாறு தர்ம நீதிப்படி நடந்துகொள்ளப் போகிறு யென்பதை யான் தெரிந்து கொள்ளவேண்டும்" என்று[...]

நீதிப்பரிபாலன தர்மத்துறையில் நூர்[ஜ]ஹான்பேகம் அரசரினும் தாழ்ந்த மாதரசியல்லை. நியாயமெனின் உடன் பிறந்தானின் உயிரென்ன? தன்னுயிரைக் கூட தியாகஞ் செய்யத் துணிந்து விடுபவரா யிருந்தார். எனவே அவரது கண்கள் தீப்பொறி ப[றக்]க, கார்கரங்கள் கோபா வேசத்தினுல் பத[றத்] தமதாசனத்தினின் றெழுந்து பெண்சிங்க[ம்] போல் வெளிப்பட்டனர். உடனே அர[சர]ிடமிருந்த வாளாயுதத்தை வாங்கி உரு[வி] கரத்திலேந்தி வானத்தை நோக்கி "ஏ இறை[வ]வா! உனது கட்டளைப்படியே யான் நடந்[து] கொள்ள கடமைப் பட்டுள்ளேன். நியாய[த்]தை வழங்குங்கால் எத்தகைய தாக்ஷண்[ய]மும் யான்கருதேன். ஒருசிறு மழலைக் குழ[ந்]தையை தன் அற்ப சுகத்திற்காகக் கொ[லை] செய்தபாவி என் உடன் பிறந்தானு[க] இருப்பதைக் காட்டினும் இறந்து மாய்வ[தே] மேல். அத்தகைய கோழையும் கொடிய[வ]னும் என் தந்தை மிர்ஜா கியாஸுத்தீனின் புதல்வனுகப் பிறவாதிருந்தால் எம்மட்டோ கண்ணியமா யிருந்திருக்கும். அத்தகை[ய] கொடும்பாவியை நீதி பரிபாலனத்தைக் கருதியான் இத்தரணியில் இனியொரு க்ஷண[மு]மும் ஜீவிக்கவிடேன் என்று வீராவேசம் பூண்டவராய் தன் கரத்திலிருந்த கூறியவாளை வீசி ஒரே வீச்சில் ஆஸிப்ஜாவுடைய கிரசை[க்] கொய்து சிரம் வேறு உடல் வேருக்கி விட்ட[]னர். நியாயத்திற்காக வென்று தன் பிரிய சகோதரனை வெட்டி வீழ்த்தினர். என்னே இவர்தம் நெறி!

அத்தகைய ஆஸிப்ஜாவுடைய கப்ருதான் இன்று லாஹுரில் கிழக்குத் திசையில் "மக்[ப]பரயெ ஆஸிப் ஜாஹ்" என்ற பெயரால் வழங்கி வருகின்றது. இறைவன் ஆஸிப்ஜா வின் ஆத்மாவுக்கு மக்பிரத்தையும், விமோசனத்தையும் அளித்தருள் வானுக ஆமீன்.

நம்மில் சிறியோர்மீது இரக்கம் காட்டாதவனும் பெரியார்கட்கு மரியாதை செய்யாதவனும் நற்காரியத்தைச் செய்யும்படி ஏவாதவனும் விலக்கப்பட்டதைச் செய்யாதபடி தடுக்காதவனும் நம்மைச் சேர்ந்தவனல்லன்.

## செய்தித் திரள்

### மாத்தளை.

[...] சிறப்புதங்கிய இங்நகரின்கொங்காவல ஜும்ஆப் பள்ளியானது கடந்த சில ஆண்டுகளாக [அ]தன் நிர்வாகம் ஒழுங்குக் குறைவாக இருந்தது மல்லாமல் மராமத்து வேலைகளும் அற[வே] நடை பெருமலிருந்தது. இதனைக் கண்[ணுற்]ற அவ்வூர் மஹாஜனங்கள் அக்குறையை [அ]கற்றுவான் வேண்டி ஓர் கமிட்டியை நிய[மி]த்தனர். அதற்கு ஜனுப் எம். கே. அபூ[பக்]க்கர் (டவுன் ஆராய்ச்சியார்) தலைவராகவும். ஜனுப் எஸ். உமுருதீன் (C. G. R. ஹெட் [கான்ஸ்டபிள்] [போ]ார்ட்) உபதலைவராகவும், ஜனுப் எம். எம் [மு]ஹம்மத் ஸாலிஹ் (பெருக்கோல்) பொக்[கி]ஷதாராகவும், ஜனுப் O. L. மஹ்மூத் காரியதரிசியகவும் நியமிக்கப்பட்டனர். அச்சபை[யி]ன் நன் முயற்சியால் பள்ளியின் மராமத்து வேலைகளும் அதற்காக வக்பு செய்யப்பட்ட [நி]லங்களின் வருமானமும் முன்னையினும் [இ]ரட்டிப்பாக வருவதுடன் இன்னும் அதிக[மா]ன நிலங்கள் வாங்கப்பட்டும், ஆதாயம் [த]ரக்கூடிய கட்டிடங்க ளமைக்கப்பட்டும் [வ]ருகின்றது. இவ்வருஷம் ரமலான் 27-வது [இ]ரவன்று மின்சார விளக்குகள் முதலியவை[க]ளைக்கொண்டு அலங்காரஞ்செய்து தராவீஹ் [த]ொழுகை மிக சிறப்பாக நடைபெற்றது. [...]த்துடன் அங்கு விஜயஞ் செய்திருந்தோ[ர] னைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்டது. [இ]ம்மஸ்ஜிதை இத்தகைய அலங்கார முறை[யி]ல் அபிவிருத்தி செய்துவரும் கனதனவான்[க]ள் யாபேர்களுக்கும் ஏகபராபர வல்ல[]யன் நற்கிருபை புரிவானுக என்று

K. M. ஸயீது.
மாத்தளை S. A. M. A. காரியதரிசி
தெரிவிக்கிறுர்.

(குறிப்பு:— இவ்வூரில் நடைபெற்று வந்த [அ]னுசார பாபக்கிரியை யாகிய பஞ்சாவைப்ப[]தன்னும் துர்நடத்தையை அகற்ற இவ்வூர் [க]னதனவான்கள் தக்க முயற்சித்து கவர்ன்[மெ]ண்டாருக்கு பெட்டிஷன் செய்தபொழுது அதன் விசாரணை இப் பள்ளியிலேயே நடைபெற்று அத்தகைய 'ஷிரிக்' ஆன கருமம் அவ் வூரைவிட்டும் அகற்றப்பட்டது. அச்சங்கையும் மேன்மையும் பொருந்திய பள்ளியில் அனுசாரக் காரியமாகிய கொடிகூண்டு நடைபெறுவதைக் கேட்டு வருந்துகின்ருேம். இவ் அனுசார கொடிய பித்அத்தான காரியத்தை அகற்றுவதற்கு மேலே குறிப்பிடப் பெற்ற சபையார் தக்க முயற்சி எடுத்து இனி அவை நடைபெருதபடி செய்து இரு லோகத்தின் கண்ணியத்தைப் பெறுவார்களென எதிர்பார்க்கின்ருேம். ப-ர்.)

### காசிக் கலகம்.

காசியில் ஹிந்து-முஸ்லிம் கலகம் நிகழ்ந்து அநேக முஸ்லிம்கள் கொல்லப்பட்டு ஷஹீதானுர்கள். அநேக மஸ்ஜிதுகள் மூர்க்க ஹிந்துக்களால் தகர்க்கப்பட்டும், சேதமாக்கப்பட்டும் கண்ணிய ஹீனப்படுத்தப் பெற்றும் போயின. ஷஹீதான முஸ்லிம்கள் 40 பேர்களிருக்குமென்றும், 16 மஸ்ஜிதுகள் சேதமாயின வென்றும், அனேக முஸ்லிம்களும் ஹிந்துக்களும் காயமடைந்து ஆஸ்பத்திரியில் கிடக்கின்றன ரென்றும் சரியான தகவல் கிடைத் திருக்கின்றது.

காசியில் ஹிந்து முஸ்லிம் கலத்திற்கு காங்கிரஸ் ஹிந்துத் தொண்டர்களே காரண பூதரானர். முதலில் காங்கிரஸ் ஹிந்துக்கள் குறிப்பாக முஸ்லிம்களது ஜவுளிக்கடைமீதே பலாத்கார மறியல் புரிந்தனர். இதனுல் ஏற்பட்ட மனத்தாபத்தின் மீது பிரபல முஸ்லிம் ஜவுளி வியாபாரியான முஹம்மத் ஜான் என்பவரைக் கொன்று ஷஹீதாக்கினர். இது தொடுத்து புகைந்து கொண்டிருந்த பிணக்குத் தீகொழுந்துவிட்டெரியத் தலைப்பிட்டு விட்டது.

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை, சுயராஜ்ஜியம் பெற அத்தியா வசியமாய் வேண்டுமென வாய்ப் பறையறையும் ஹிந்துத் தலைவர்கள் பனரஸ்ஹிந்துக்களின் அடாத செயலை கண்டிக்கா திருக்கின்றனர். முஸ்லிம் தலைவர்களது கமிட்டி ஒன்று காசி சென்று முஸ்லிம்

களை சமாதானப் படுத்தி உண்மை நிகழ்ச்சிகளை விசாரித்து வந்திருக்கின்றனர். இவ்விஷயம் இந்திய முஸ்லிம் மகா ஜனங்களிடை பேராத்திரத்தையும் பரபரப்பையும் உண்டு பண்ணியிருக்கின்றது.

## மாப்பிள்ளை கைதிகளுக்கு விடுதலை?

சென்னை முஸ்லிம்கள் ஒருபெருங் கூட்டங் கூடி, 1921-ம் வருட மலையாளக் குழப்பத்தில் தண்டனை அடைந்த மாப்பிள்ளை கைதிகளை மன்னித்து விடுதலை செய்துவிட வேண்டுமென்று பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டுள்ளது.

## ஆப்கன் குழப்பக்காரரின் விடுதலை.

கான் முஹம்மத் என்பவர் தலைமையில் கோஹ்தாமனில் குழப்பஞ் செய்து இதுகாறும் கைது செய்யப்பட்டு சிறையிலிருந்த 180 பேர் அடங்கிய கூட்டத்தினர் அமீர்நாதிர்ஷா வுடைய காருண்யத்தினால் விடுதலை செய்யப்பட்டு விட்டனர். பறிமுதலாயிருந்த அன்னோரின் சொத்துக்களும் திரும்ப அளிக்கப்பட்டு விட்டன.

## மௌலானா ஷவ்கத் அலீயின் இந்திய விஜயம்.

காலஞ்சென்ற நம் மௌலானா முஹம்மத் அலீ மர்ஹூமவர்களுடைய ஜனாஸா அடக்கத்திற்காக பைத்துல் முகத்தஸ் சென்றிருந்த மௌலானா குடும்பத்தினராய மனைவி புத்திரி, மருகர் ஆகியோர் ஏற்கெனவே இந்தியா வந்து டில்லியில் சேர்ந்து விட்டனர். ஆனால் தமயனாரான மௌலானா ஷௌகத் அலீ சாஹிப் அவர்கள் இஸ்லாமிய நாடுகளின் சுற்றுப் பிரயாணத்துக்குப் புறப்பட்டு எகிப்து ஷாம் முதலிய தேசங்களின் நகர்களை சுற்றிக்கொண்டும், பல பெரியோர்களை தரிசித்து பேசிவிட்டும் சின்னாட்கட்குமுன் இந்தியாவுக்கு (டில்லிக்கு) விஜயம் செய்துவிட்டனர். இனி மௌலானா அவர்கள் இந்திய முஸ்லிம் சமூகத்தின் உரிமைகளுக்காக வேண்டி காங்கிரஸ்காரர்களுடன் பேசிக்கொண்டு பாடு படுவார்கள். முஸ்லிம்கள் காங்கிரஸில் சேர்ந்து உழைக்கவேண்டுமா? என்பதுபற்றி டாக்டர் அன்ஸாரி, கிச்சிலு, காந்திஜீ, ஷௌகத் அலி முதலியோர் கலந்து ஆலோசனை புரிகின்றனர்.

## இர்வினுடன் மௌலானா சந்திப்பு.

மார்ச்சு ஆம்பத்தில் மௌலானா ஷவ்கத் அலீ அவர்கள் ராஜமாளிகையில் லார்டு இர்வினை கண்டு, இந்திய முஸ்லிம்களுக்கான உரிமைகளைப்பற்றி வெகுநேரம்வரை சம்பாஷித்துக் கொண்டிருந்தனர்.

## துருக்கி நிலைமையும் கமால்பாஷாவின் அறிக்கையும்.

சின்னாட்கட்கு முன் துருக்கியில் கமால் பாஷாவின் ஆக்ஷிக்கு எதிரிடையான குழப்பம் நேரிட்டு பல விபரீதங்கள் ஏற்பட்டன. இதன் பயனாக கமால் அரசாங்கத்தாரால் கைது செய்யப்பட்ட பலர் தூக்கிடப்பட்டும் சிறைபட்டும் தண்டிக்கப்பட்டனர். த[illegible] போதும் துருக்கியில் எதிர்ப்பும் அடக்கு முறையுமிருந்தே தான் வருகின்றன.

சமீபத்தில் கமால்பாஷா பத்திரிகைகட்கு தமது இஸ்லாமிய அபிமான அறிக்கையொன்று வெளியிட்டுள்ளார். அதில் இஸ்லாத்தின் அனுகூலமே தமது ஜீவிய நோக்கமென்றும், தாம் குர்ஆன், ஹதீஸ் போதிக்கும் இஸ்லாமிய ஆசாரத்தைவிட்டும் பிறழ்ந்து நடக்கவில்லை யென்றும், சில பிற்போக்குள்ள நோக்குடையோரால் கூறப்படும் அபவாதங்களை ஜனங்கள் நம்பக்கூடாதென்றும் எதிர்ப்புப்புரிவது விரோதிகளின் சூழ்ச்சி யென்றும், இதுவரை துருக்கியர் இஸ்லாத்திற்கே பாடுபட்டு ஜிஹாது செய்துள்ளன ரென்றும், இனியும் இஸ்லாத்துக்கு இடையூறு நேரிடுவதாயின் தாம் போராடு[illegible] தற்காக பின்னடையாரென்றும்" அறி[illegible] யிட்டு உறுதிகூறியுள்ளார். இவ்வாறிருப்பின் உலக முஸ்லிம்கள் அவரை பாராட்டி அ[illegible] மானிக்க கடமைபட்டுள்ளார்கள்.

## அகில இந்திய முஸ்லிம் மகாநாடு.

இம்மகாநாட்டின் ஐந்தாவது ஆண்டுக் கூட்டம் மார்ச் மாதம் 26-ந் தேதி நிகழ்த்துவ[illegible]தென்றிருந்தது. தக்ககாரணத்தைமுன்னிட்[illegible] ஈஸ்டர் விடுமுறை வரை ஒத்திவைக்கப்ப[illegible]டுள்ளது. இதற்கு ஸர் ஆகாகான் தலைமை வகிப்பரென்று கருதப்பட்டது. அவரின்[illegible]மையால் நம் மௌலானா ஷவ்கத்அலீ இத[illegible]குத் தலைமை வகித்து நடத்துவார்கள்.



## எகிப்தில் சுதேசி இயக்கம்.

எகிப்து மக்களிடையே நம் இந்திய மக்[illegible]களைப்போல் சுதேசியக் கிளர்ச்சி மும்முரமா[illegible]யிருந்து வருகின்றது. வப்து தேசீய கக்ஷியினர்தான் இத்துறையில் அதிகமாய் உழைக்கின்றனர். இக்கக்ஷித் தலைவர் நஹிஸ் பாஷா முதலில் தாமே அன்னியத் துணி பகிஷ்கரித்து சுதேசித் துணியுடுத்தி பிறர்க்கு வழி காட்டிவிட்டார்.

## ஆப்கனும் அலி அஹ்மத் ஜானும்.

தற்போதிய ஆப்கான் அரசாங்க அமீர் நாதிர்ஷா துர்ரானி கபீலாவைச் சேர்ந்[illegible]தவராதலால் கல்ஜயீகபீலாவினின்று ஒருவரை [illegible]தான் பிரதம மந்திரியாய் நியமிக்க வேண்டுமென்று கல்ஜயீக் கூட்டத்தினர் ஜிர்கா கூடி தீர்மானஞ் செய்துள்ளனர்.

காலஞ் சென்ற ஸர்தார் அலீ அஹ்மத் ஜானின் சொத்துக்களை ஆப்கன் சர்க்கார் பறிமுதல் செய்து கொண்டனர் என்று [illegible]மீன்தார் பத்திரிகை எழுதியுள்ளது.

## இந்தியாவின் மொத்த ஜனத்தொகை.

சென்ற பிப்ரவரிமாதம் இந்தியாவெங்கும் [illegible]ங்காங்கு எடுக்கப்பட்ட ஜனக் கணிதத்தை [illegible]கொண்டு, பிரிட்டிஷ் இந்தியாவுடையவும், [illegible]தேசிய சமஸ்தானங்களுடையவும் மொத்த ஜனத்தொகை 35 கோடி 15 லக்ஷம் என்று தெரியவருகின்றது. சென்ற 1921-ஆம் வருடம் எடுக்கப்பட்ட ஜனக்கணிதப்படி மேற்படி தொகையானது 31 கோடி 9 லக்ஷம்தானிருந்தது. இவ்விரண்டை கவனிக்குமிடத்து [illegible]ல வருடத்துக்குள் 100-க்கு 10 விகிதம் [illegible]ஜாபிவிர்த்தி யேற்பட்டிருப்பதாய் கருதப்படுகிறது.

## இராக்தேச மாணவர்கள்.

இராக் தேசமக்கள் கல்வித்துறையில் புத்[illegible]க்க முடையவர்களாயிருக்கின்றனர். அர[illegible]த்தாரும் அன்னோர்க்கு சகலவிதமான [illegible]தவியும் சகாயமும் அளித்து வருகின்றனர். [illegible]யர்தரக்கல்வி, விஞ்ஞானம், தொழில், வர்த்தகம், விவசாயம், ரசாயனம் ஆகிய வித்தியாத் துறைகளில் தேர்ச்சிப் பெற்றுவருவதற்காக வென்று 450 மாணவர்களை அன்னிய நாட்டு சர்வகலாசாலைகட்கு அனுப்பமுடிவு செய்யப் பட்டிருக்கிறது. இது போழ்து ஐரோப்பா, அமெரிக்கா, ஜெர்மன் ஆகிய அன்னிய நாட்டுகலாசாலைகளில் இராக்மாணவர்கள் பலர் கலைபயின்று வருகின்றனர். 40 மாணவர்கள் அரசாங்கச் செலவில் பொருளாதாரக் கலைக்கும், 4 மாணவர்கள் மின்சாரப் படிப்புப் பெறுதற்கும் என்று பிரத்தியேகமாய் ஐரோப்பிய நாட்டுக்கு அனுப்பப் பட்டுள்ளார்கள். இன்னும் 4-மாணவர் ரயில்வே சம்பந்தமான வித்தை கற்கவும், வேறு 4 பேர் நிலத்தினின்று ஊற்று திராவகம் எடுக்கும் கலைப்பயிலவும் நியமிக்கப் பட்டுள்ளார்கள்.

## சர்வதேச சங்கமும் துருக்கியும்.

சர்வதேச சங்கத்தினர் நீண்ட விவாதத்துக்குப் பிறகு, துருக்கி யரசாங்கத்தைப் பொருளாதார சம்பந்தமான சபையில் ஒரு அங்கத்தினராக சேர்த்துக் கொள்வதென்று ஒப்புக்கொண்டனர். துருக்கி யரசியல் சர்வதேச சங்கத்தில் சேர்ந்திருப்பது அத்தியா வசியமாகுமென்று அங்கோராப் பிரதிநிதி வற்புறுத்திப் பிரசங்கித் துள்ளார். யுத்த ஆயுதங்களைக் குறைக்கவேண்டு மென்ற விஷயத்தில் ஐரோப்பிய அரசாங்கம் தமக்கு சாதகமாய் நடந்து கொள்ளாவிட்டால் மேற்படி சர்வதேச சங்கத்தில் துருக்கிச் சேருவதில் பிரயோஜனமில்லை யென்று அரசியல் நிபுணர்கள் கூறியுள்ளனர்.

## ஷாமின் பொதுத்தேர்தல்.

ஸிரியாவின் தற்போதிய மந்திரிச் சபையினர் சில ஆக்ஷேபனையின் காரணமாக தமது ஸ்தானத்தை ராஜினாமாச் செய்ய விருக்கின்றனர். இதன்பின்னர் அரசாங்கப் பொறுப்பை ஜலால் பெக்ஜுஹ்றீ அவர்கள் ஏற்றுக் கொள்வார். இவர்ஷாமின் சட்டக்கலை நிபுணர்களில் சிறந்த ஒருவராவர். இதுபோழ்து ஷாமில் பொதுத் தேர்தலுக்குரிய ஏற்பாடுகள் தீவிரமாய் நடைபெற்று வருகின்றன.

---

# ஆசிரியர் குறிப்புகள்

இரண்டாம் சர்வகட்சி மகாநாடு:—காந்திஜி-இர்வின் ஒப்பந்தத்தின் பயனாய் இரண்டாவது முறையாக மீண்டும் ஓர் சர்வகட்சி மகாநாடு இங்கிலாந்தில் நடைபெறும். முன்னர் நடைபெற்ற மகாநாட்டில் இந்தியாவின் ஆட்சிமுறை கூட்டுறவு முறையில் நடைபெறல் வேண்டும் என்றும், பாதுகாப்புக்கள் பல சிற்காலம் வரையிலேனும் இருத்தல் அவசியம் என்றும், சிறுபான்மையோரின் பாதுகாப்புப் பொருப்பும் அரசாங்கத்தாரிடம் இருத்தல் நலமென்றும் முடிவு செய்யப்பெற்றன வெனினும், வழங்கப்போகும் சீர்திருத்தத்தை எல்லோரும் சேர்ந்து அனுஷ்டிக்க வேண்டுமென்பதை கருதி அரசியல் கட்சியினராய காங்கிரஸ்காரர்களையும் இம்மகாநாட்டில் கலந்துகொள்ளும்படி செய்தல் நலம் என்பதை உத்தேசித்து அதற்காக காந்திஜியும் இர்வின் பிரபுவும் கலந்தாலோசித்து காங்கிரசாரையும் முக்கியமாக காந்திஜியையும் கொண்ட ஓர் மகாநாட்டை மீண்டும் கூட்ட முன் வந்திருக்கின்றனர். கடிதில் இம்மகாநாடு நடைபெறும். இதற்குள்ளாக, இந்து முஸ்லிம் சமரஸம், கராச்சிக் காங்கிரஸ் முடிவு, சுதேசமன்னர்களின் உடன்பாடு ஆகிய இப் பிரச்சினைகள் இறுதி காணல் வேண்டும். இதன் தொடர்பாய் காந்திஜியும் இர்வின் பிரபுவும் முழுமனதுடன் உழைத்துவருகின்றதாய்த் தெரிகின்றது. மகாநாடு இனிது நடைபெறுமென்று எதிர் பார்க்கின்றோம்.

இந்திய முஸ்லிம் பிரச்சினை:—இப் பிரச்சினை ஓர் ஓயா வழக்காய் இருப்பினும், சமரசம் என்பது இவ் விருதரத்தார்க் கிடையில் ஏற்படாமல் எத்தகைய ஆட்சி முறையினையும் இந்தியாவில் சமாதானமாய் நிறுவுவதற்கு இயலாது என்று நாம் கருதுகின்றோம். இஃது அரசாங்கமும், கட்சித் தலைவர்களும் நன்கு அறிந்த ஓர் விஷயமாகும். காந்திஜியவர்கள் மௌலானா ஷௌகத் அலியைக் கண்டு கலந்து பேசி இருப்பதில், நமக்கு இதுகாறும் வெளியான செய்திகளிலிருந்து, காந்திஜி உண்மையாக உழைக்கின்றார் என்றும், அவரது தாராள மனத்தைப் பெரும்
பான்மையினராய இந்துக்கள் அனுசரிக்
வேண்டுமென்று வற்புறுத்துகின்றார் எ
றும் அறிகின்றோம். காங்கிரசார் அனைவரு
ஒப்புக்கொள்ளற் கியலாது எனக் கண்டு
ஓர் ஒப்பந்தத்தைக் காந்திஜி இர்வின் பிர
வோடு அமைத்துக்கொண்டார். இதில் த
கட்சியார் பிடிவாதமாகக் கைக்கொண்ட ப
விஷயங்களை விட்டுக்கொடுத்தும் இருக்கி
றார். எனவே, சமாதான வாழ்க்கை
விழையும் காந்திஜி இந்து முஸ்லிம் பிரச்சினை
யின் கண்ணும் இந்துக்கள் சமரசத்தோரணை
யோடு நடந்து கொள்ளல் வேண்டும் என்
வற்புறுத்துவது காந்தி இர்வின் ஒப்பந்த
போக்கிற்கு இயைந்ததாகவே யிருக்கின்ற
கண்கூடு. இந்து மகாசபையினர் என்று
போல் பிடிவாதமாகவே இருக்கின்றார்க
எனினும் இந்தியாவின், பொதுநலனை விரு
பும் காந்திஜியின் போதனையை ஏற்று இவ
கள் முஸ்லிம்கட்குரிய உரிமைகளை அளிக்க
சம்மதிப்பரோ என்பது இனி விளங்க
பாலதாய் இருக்கின்றது. இதற்கிடையி
அஃதாவது ஏப்ரல் 5-ந் தேதி முதல் அகி
இந்திய முஸ்லிம் மகாநாடு டில்லியி
நடைபெறும். அதில் முன்னரே வற்புறு
தப் பெற்றனவாயும், அவைகளில் சிறித
விட்டுக்கொடுத்தற் கியலாதனவாயும் உள்
தேர்தல் முறை, சிந்துப் பிரிவினை, வங்கா
பாஞ்சால ஆட்சியில் முஸ்லிம்களின் பெரு
பான்மை, வடமேற் கெல்லையில் பொறு
பாட்சி ஆகியவைகளைப்பற்றி ஆலோசிக்க
படும் என்று தெரிகின்றது. எனவே, இ
மகாநாட்டின் முடிவிற்கு இந்துக்கள் இண
வார்களாயின் சமரச ஆட்சி இந்தியாவி
அமைவது அத்துணை எளிதன்று.

நிற்க, சமரசத்திற்கு இந்து முஸ்லிம் த
வர்கள் முயற்சியோடு உழைத்து வரும் இ
போழ்து டில்லி, ஆக்ரா, கான்பூர் லாகூ
முதலிய ஊர்களில் இந்து முஸ்லிம் சச்சர
ஏற்பட்டுப் பல முஸ்லிம்கள் இறந்தனர் எ
றும் கேட்டுத் துயருறுகின்றோம். சமரச
தை உண்டுபண்ண கருதியிருக்கும் ஹிந்த
கள் இக்கலகங்கள் ஏற்படுவதின் மூலகாரண
களை ஒழிக்க முயற்சிப்பார்களாக.

